அவர் அணியும் ஆடைகள் நாகரீகத்தின் சின்னம். வெற்றிப் பெருமிதம் துலங்கும் அவரது தோற்றத்துக்கு அடிப்படை சக்தி "டெரிலின்" சூட்டிங்தான். இறக்குமதி செய்யப்பட்ட பாலியஸ்டர் நூலால் தயாரிக்கப்பட்ட சக்தி "டெரிலின்" சூட்டிங்குகளும், ஷர்ட்டிங்குகளும் துவைத்து மடிப்புக் கலையாமல் அணியக்கூடியவை. நிறம் மங்காமல் நீடித்து உழைக்கும் இவை சொகுசானவை என்பதோடு எங்கும் அணிந்துசெல்ல ஏற்றவை.

# Shakti Silks

போதார் தயாரிப்புகள்

டெரிலின் சூட்டிங்குகள் மற்றும் ஷர்ட்டிங்குகள் . ரேயான் சூட்டிங்குகள் . க்ரேப் டஃபேட்டா . ஸாட்டின் . ப்ரோகேட் . நைலான் . ரேயான்

## அவரது தோற்றப் பொலிவின் கம்பீரமும் மிடுக்கும் அலாதி...



shilpi SS 155 Tam





புத்தம் புது தேயிலை

சுவையுள்ள தேயிலை

சிறந்த தேயிலை

# டாடா-ஃபின்லே
# தேயிலை

ஈடில்லாத தேயிலை!

பின்வரும் ஐந்து ரகங்களில் கிடைக்கிறது:
ப்ரெஸ்டிஜ் டார்ஜிலிங்க்
லலித் இலைத் தேயிலை,
மிலாப் இலைத் தேயிலை,
பஹாதுர் தூள் தேயிலை,
ஷான் தூள் தேயிலை.



**டாடா-ஃபின்லே** தேயிலை பருகுவீர்;
உன்னதத் தேயிலை இன்பம் எய்துவீர்!

அஜீரணத்தால்
அவஸ்தைப்பட
வேண்டாம்!

# ஹயூலெட்ஸ் மிக்சர்




## அருந்தி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

வேலை மும்மரமும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன; பசியை மந்திக்கச்செய்து, தளர்ச்சியூட்டுகின்றன. ஹ்யூலெட்ஸ் மிக்சர் விரைவில் நீடித்த பரிகாரம் அளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் வயிற்று உபாதையை விரைவில் போக்கி, நிரந்தரமாக குணமளிக்கிறது. அஜீரணமுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர், குழந்தைகளின் வயிற்றுக் கோளாறுகளுக்கும் கூட சிறந்தது. வயிற்றுப்போக்குக்கு அபினிசேர்ந்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.

**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்கு சிறந்தது.**

C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86 A, தைனியப்ப நாயக் தெரு, மதராஸ் 3




தொண்டை
மற்றும்
மார்பு உபாதை
களுக்கு உகந்த

# பெப்ஸ்

வில்லைகளை உட்கொள்ளுங்கள்.

பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவிபோன்ற அதன் சத்து வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், இருமல் மற்றும் ஜலதோஷத்திற்கும் காரணமான கிருமிகளைக் கொல்ல உதவுவதுமான வேலையைச் செய்வதை உணருங்கள். உடனடி இதமளிக்கிறது பெப்ஸ்.



கெடுதி விளைவிக்கும் மருந்துகள் எதுவும் இதில் கிடையாது.

குழந்தைகளுக்கும் பயமின்றி அளிக்கலாம்.

ப்ராங்கைடிஸ் தொண்டைப் புண், மண்டைநீர், அடைப்பு ஜலதோஷம் மற்றும் இருமலுக்கு உடனடி இதமளிக்கிறது.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

ஸி. இ. ஃபுல்ஃபோர்ட் (இந்தியா) பிரை. லிட்.

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ் மோதி அண்டு கம்பெனி, சென்னை-1
தபால் பெட்டி 1902



பவன் சூரியன்
மார்க் புகையிலை
காரைக்குடி

# இப்பொழுதே சிந்தால் டாய்லெட் பவுடரை வாங்கி 30 பைசாவை மிச்சப்படுத்துங்கள்

சிந்தால் சோப் வாங்குபவர்களுக்கு ஒரு பிரத்யேகமான சலுகை! சிந்தால் சோப்பின் உறையில் நீங்கள் ஓர் சலுகைக் கூப்பனைக் காண்பீர்கள். இந்தக் கூப்பன், நீங்கள் வாங்கும் சிந்தால் டாய்லெட் பவுடரின் விலையில் உங்களுக்கு 30 பைசா சலுகை அளிக்கும்.




வியர்வை நாற்றத்தைப் போக்கி, பாதுகாப்பளிக்கும் ஜி-11 கலந்த டாய்லெட் பவுடர்

ஜி-11 கலந்த அழகு சாதன சோப்




இந்தச் சலுகை 28உ பிப்ரவரி 1965வரை தான்

godrej
கோத்ரேஜ்

சோப்புகளிலும், அழகு சாதனங்களிலும் மிகச் சிறந்த பெயர்.

CTP-9 TAM

# எந்த ஸ்டேஷனையும் தெளிவுடன் கேட்டு ரஸிக்க

## நேஷனல் எக்கோ

## அளிக்கும் கவர்ச்சியான புது மாடல்கள்

இந்தியாவில் ரேடியோ உற்பத்தியில் முன்னோடிகளான நேஷனல்–எக்கோ பெருமிதத்துடன் அளிக்கும் மூன்று புதிய மாடல்கள்: U-819, U/A-806, A-829. நேஷனல்–எக்கோவின் உன்னத தன்மைக்கு உதாரணமான இவை ஒவ்வொன்றும் தர நிர்ணய பரிசீலனைக்கு உட்படுத்தப்பட்டவை... இவற்றின் இயற்கையான, தெள்ளிய, நாதத்தை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள். இன்றே உங்கள் அருகில் உள்ள நேஷனல்–எக்கோ வியாபாரியிடம் சென்று, நீங்கள் விரும்பும் ஸ்டேஷன்களை வைத்துக் கேளுங்கள்!

விலைகள் எக்சைஸ் ட்யூடி உள்பட; வரிகள் தனி.

**மாடல் U-819:**
ஏஸி/டிஸி செட். 5 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள். பேக்லைட் பெட்டி.
ரூ. 298.00



**மாடல் 806:**
6 வால்வுகள், 3 வேவ் பாண்டுகள். நவீன மாதிரி அழகிய மரப்பெட்டி. மாடல் A-806, ஏஸி செட். மாடல் U-806, ஏஸி/டிஸி செட். ரூ. 395.00



**மாடல் A-829:** ஏஸி செட். 6 வால்வுகள், 4 பாண்டுகள். பர்மனென்ட் மாக்னெட் ஸ்பீக்கர்; பேஸ், ட்ரெபில், மற்றும் மீடியம் நாதத்துக்கான 3 புஷ் பட்டன் டோன் கன்ட்ரோல்கள். பாண்டுகள் தேர்வுக்கு பியானோ கீ அமைப்பு. ரூ. 481.00

**ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்**
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி . பெங்களூர் . ஹைதராபாத் . பாட்னா

நேஷனல் எக்கோ / ரேடியோக்கள்

இந்தியாவிலேயே மிகப்பெரிய ரேடியோ ஃபாக்டரியின் தயாரிப்பு

JWT-GRA-3033A

## களஞ்சியம்

"துறைவன்"

களஞ்சிய மொன்று
சமைத்தது தென்றல்
கண்ணுறங் காமல்
மண்ணில் அலைந்து (களஞ்)
ஆயிரம் ஆயிரம்
மலர்களின் வாசம்
ஆசைக் காதலர்
மொழிந்திடும் நேசம்
சேயின மழலையர்
செந்தளிர் ஓசை
சிந்திடு பூமழை
நாதமும் சேர்த்துக் (களஞ்)
தனிமைக் குளத்தின்
தாமரைக் கனவு
தங்க முகங்களில்
பொங்கும் புன்னகை
கனிகளின் நாணம்
கடலலை நடனம்
கானக் குயிலின்
தேனிசைப் படலம் (களஞ்)


# கல்கி


## பொருளடக்கம்


குரோதி மார்கழி 5 — டிசம்பர் 20




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

ஹிந்திப் பித்து
ஆங்கில
எதிர்ப்பு வெறி


ஆஹா! நம் மக்களை
எவ்வளவு எளிதில்
அமைதி கொள்ளுமாறு
செய்ய முடிகிறது!
மக்கள்
PK



மலர் 24 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 21

# மறு ஆராய்ச்சி தேவை

மூல அரசியல் சாஸனம் அளித்திருந்த ஜீவாதார சுதந்திர உரிமை ஷரத்துக்களைப் பார்லிமெண்ட் மாற்றலாமா, கூடாதா? இவ்விஷயத்தில் ஸுப்ரீம் கோர்ட் ஜட்ஜுகள் மாறுபட்ட அபிப்பிராயங்கள் கொடுத்திருக்கிறார்கள். நில உடைமை பற்றிய பதினேழாவது திருத்தத்தை ஆட்சேபித்துத் தொடுக்கப்பட்ட வழக்கில் இந்தப் பிரச்னை எழுந்தது.

'சாஸனத்தின் மூன்றாவது பிரிவு அளிக்கும் ஜீவாதார உரிமைகளை ரத்து செய்கிற, அல்லது குறைக்கிற, எந்தச் சட்டத்தையும் சர்க்கார் செய்யலாகாது' என்ற 13 (2) சாஸன ஷரத்தின்படி, ஜீவாதாரச் சொத்துரிமையைக் குறைக்கும் பதினேழாவது திருத்தம் செல்லாது என்று வாதியின் தரப்பில் கூறப்பட்டது. இதே போல் முன்பு நடந்த ஒரு வழக்கை விசாரித்த காலஞ்சென்ற நீதிபதி பதஞ்சலி சாஸ்திரி அவர்கள், 'மேற்படி ஷரத்துப்படி ஜீவாதார உரிமைகளுக்கு விரோதமாகச் சாதாரண சட்டம் (Law) செய்யக்கூடாது என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். சாஸனச் சட்டத் திருத்தம் (Amendment) செய்யக்கூடாது எனப் பொருள் கொள்வதற்கில்லை. சாஸனச் சட்டத் திருத்தம் வேறு, சாதாரணச் சட்டம் வேறு' என்று தீர்ப்புக் கூறி வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டார். இப்போது பதினேழாவது திருத்த ஆட்சேபணை மனுவை விசாரித்த ஐந்து நீதிபதிகளில் மூவர் அந்தத் தீர்ப்பையே அநுசரித்து வழக்கைத் தள்ளிவிட்டனர்.

நாட்டின் நீதித் தலைமை பீடத்தின் தீர்ப்பை மதிக்கிறோம். எனினும் 'சுதந்திர உரிமைகளைச் சாதாரணச் சட்டத்தால் மட்டுமே சிதைக்கக் கூடாது; ஆனால் ஆதார சாஸனச் சட்டத் திருத்தத்தால் சிதைக்கலாம் என்று கருதுவது பொருந்துமா?' என்று சிந்தனை எழுகிறது. வழக்கை விசாரித்த ஐந்து நீதிபதிகளில் இருவர் இவ்வாறே கருதி ஜீவாதார சுதந்திர விரோதமான சட்டத் திருத்தங்களை மூல சாஸனம் அநுமதிக்கவில்லை என்பதற்குப் பல காரணங்கள் தெரிவித்துள்ளனர்.

'மூல சாஸனத் திருத்தத்தை நிறைவேற்றும் முறை என்ன என்பதை விளக்கும் 368-வது ஷரத்தில் ஜீவாதார உரிமைகளைத் திருத்தக்கூடாது என்று ஐயமற விதிக்கப்படவில்லை' என்று வழக்கைத் தள்ளுபடி செய்த பிரதம நீதிபதியவர்கள் கூறுகிறார். அவரது தீர்ப்புக்கு மாறாகக் கருத்துத் தெரிவிக்கும் நீதிபதி முதோல்கர் அவர்களோ, 'சாஸனத்தைத் திருத்த நேரிடும்போது அநுசரிக்க வேண்டிய காரியக்கிரமம் என்ன என்பதை 368-வது ஷரத்து கூறுகிறதே யன்றி சாஸனத்தின் எல்லாப் பகுதியையும் திருத்தலாம் என்று அது அநுமதிப்பதாகக் கொள்வதற்கில்லை' என்கிறார். 'மூன்றும் பிரிவு அளிக்கும் ஜீவாதார உரிமைகளைச் சிதைத்துச் சட்டம் செய்யக்கூடாது' என்ற 13(2) பிரிவுக்கு 368-வது ஷரத்து உட்பட்டதுதான் என்று கொள்வதற்கு ஆதாரமுள்ளது என்பதை அவர் சுட்டிக் காட்டுகிறார். தீர்ப்புக்குப் புறம்பாக அபிப்பிராயம் தெரிவித்துள்ள இன்னொரு நீதிபதியாகிய ஹிதயதுல்லா அவர்கள் ''மூல சாஸனம் மூன்றும் பகுதியில் பல உரிமைகளை உறுதிப்படுத்தித் தருகிறது. இவையெல்லாம் ஒரு மெஜாரிட்டியின் கையில் விளையாட்டுப் பொருள்களாக ஆவதற்கு சாஸனம் அநுமதிக்கும் என்று நினைத்துப் பார்க்கவே கடினமாயிருக்கிறது'' என்கிறார்.

ஜீவாதார உரிமைகளைப் பற்றி நீதி நிபுணர்கள் மறுபடியும் தீர விசாரித்து ஒரு முடிவுக்கு வரவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. ஆனால் எம்முறையில் இந்தப் புனர்ப் பரிசீலனையை ஸுப்ரீம் கோர்ட்டாரைக் கொண்டு செய்வது என்பதுதான் கேள்வி.

# புதுத் திசையில் திரும்ப வேண்டும்

குடும்பங்களில் பேத உணர்ச்சி கொண்ட அங்கத்தினர்களை திர்ப்பந்தப்படுத்தி உடன் வைத்துக் கொள்வதில்லை. இதுவே ஒரு தேசம் தனது எல்லைப்புற நாடுகளின் விஷயத்தில் பின்பற்றவேண்டிய கொள்கையுமாகும். நாக நாட்டு ஆதிவாசிகளைத் தில்லி ஆட்சிக்கு அடங்கச் செய்து . அதனால் அவர்களின் விரோத உணர்ச்சியைத் தூண்டி விடுவதை விட அவர்களைச் சுதந்திரமாக வாழ வைத்து அவர்களுடைய சிநேகத்தையும் விசுவாசத்தையும் பெறுவதுதான் புத்திசாலித்தனம். பிரதேச உரிமை, தேசத்தின் ஒருமை முதலிய சித்தாந்தங்களை முழக்கிக் கொண்டிருப்பதை விடச் சீன விஸ்தரிப்பின் ஆபத்தைப் பெரிதாக உணர வேண்டிய தருணம் இது. எல்லை நாடுகளிலுள்ள வீரமும் விசுவாசமும் உள்ள மக்கள் நமக்குப் பொதுவான வெளிப் பகையை எதிர்த்துத் தேசத்தைக் காக்க வேண்டியது தான் இன்று அவசியமேயன்றி, நம் ஆட்சிக்கு அவர்கள் உட்பட வேண்டியது தேவையில்லை. இந்திய யூனியனை எதிரியிடமிருந்து காப்பாற்றுவதுதான் இன்று உண்மையான நாட்டுப் பற்றேயன்றி மனோ வித்தியாசமுள்ள எல்லைப்புற நாடுகளில் நம் ஆட்சியை விஸ்தரித்து அங்கு மனக் கசப்பை வளர்த்து, சீனுவுக்கு இடம் ஏற்படுத்தித் தருவது நாட்டுப் பற்றாகாது.

நேபாளம், பூடான் இவை விஷயமாகவும் இந்தியா தவறான கொள்கையைக் கடைப்பிடிக்கிறது. ஆதி காலத்து நிலப்பிரபுத்துவ முறையிலோ குலத் தலைவர்களுக்கு அடங்கி வாழும் முறையிலோ உள்ள எல்லை நாடுகளில் தற்போது ஒரு கட்டுப்பாடும் அமைதியும் உள்ளன. 'இதெல்லாம் அநாகரிகம்' என்று சொல்லிக் கொண்டு நாம் அங்கு பார்லிமெண்ட் சட்டப்படி ஆட்சி நடத்த உதவுவதாக நினைத்து, அநாவசியக் குழப்பத்தை உண்டாக்குவது அறிவீனம். மக்களின் மரபுகளை ஒரேயடியாக மாற்றுவது இயலாத காரியம். மேலும் தற்போது நமக்கு அது தேவையில்லாத காரியம். வெளி நாடுகளிடம் எல்லை நாடுகள் சிக்கும் ஆபத்து சமயத்தில் 'தடஸ்த'க் கொள்கையை அவலம்பித்து அவற்றைக் கைவிடுகிறோம். அவற்றின் உட்பூசல்களில் தவறான முறையில் தலையிட்டு அதிருப்தியைப் பெற்று வருகிறோம். "திபெத்து போன வழியில் நேபாளம், பூடான், சிக்கிம் இவையும் போய்க் கொண்டிருக்கின்றன. வேறு சில தடைகள் மட்டும் இல்லாவிடில் ஒரே மணிக்குள் சீனு இம் மூன்று நாடுகளையும் கபளீகரம் செய்ய முடியும்" என்று ஸ்ரீ லோஹியா கூறியது உண்மை. 'இப்போதேனும் புதுத் திசையில் முயற்சி தொடங்க வேண்டும்' என்று அவர் கூறி விருப்பது தேசத்தின் விருப்பமுமாகும்.

# அரசாங்கத்தின் 'பதுக்கல்'

பண்டங்களை வாங்குவோருக்கு அவை கிடைக்காதபடி பதுக்கி வைப்பது சமுதாய விரோதமான செயல் என்பது உண்மை. பதுக்கல் செய்வது குற்றம் என்றால் அவ்விதம் பதுக்குபவர் யாராயிருப்பினும் அது குற்றமே. எக்காரணத்துக்காக மக்களுக்குப் பண்டம் கிடைக்காமல் செய்தாலும் அது குற்றம்தான். இவ்வாறு பார்த்தால் சர்க்காரும் பதுக்கல் குற்றம் செய்வதாகவே ஏற்படும். அப்பதுக்கலைச் சட்டபூர்வமாக ஆக்கியிருப்பதால் குற்றம் குறைவுபடாது. பொருளாதார விளைவுகள் சட்டத்தைப் பார்த்து நேருவது இல்லை அல்லவா?

சர்க்கார் கொள்முதல் செய்தும் இறக்குமதி செய்தும் ஏராளமான தானியத்தைக் குவித்து வைத்துக் கொண்டிருப்பது தானியங்களின் விலை உயர்வதற்கு ஒரு துணைக் காரணமாகும். சுபிட்ச நிலையில் நாடு இருந்தால் எதிர் காலத்தில் நேரக் கூடிய பஞ்சத்துக்காகச் சர்க்கார் கையிருப்பு வைத்திருப்பது முறை. நிகழ்காலத்திலேயே பஞ்சம் உண்டாகியிருக்கும் போது எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய பஞ்சத்துக்காகத் தானியத்தை வியாபாரிகளுக்கு விடாமல் சர்க்கார் தேக்கி வைப்பது அறிவுக்குப் பொருந்தாத செயலன்றோ? இதையும் பதுக்கலோடு தான் சேர்க்க வேண்டும். இவ்வாறு தேங்கியிருக்கும் தானியம் கவனக் குறைவால் கெடுவது அநியாயமாகும். அதை நியாய விலைக் கடைகளுக்கு அனுப்பி மக்களை வாங்கச் செய்கிறார்கள்.

ராணுவத்தினருக்கும் மற்றும் சில பிரிவினருக்கும் அரசாங்கம் தினந்




Courtesy: Puri, *Hindustan Times*

தோறும் உணவளிக்கக் கடமைப்பட்டுள்ளது. சர்க்கார் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யும் தானியத்தைக் கொண்டே இந்தத் தேவையைப் பூர்த்தி செய்யலாம். முக்கியமாகக் கோதுமையை இப்படிச் செலவு செய்யலாம். அதற்குப் பதில் கோதுமையை உண்டு வழக்கமில்லாத மக்களுக்கு விநியோகம் செய்கிறார்கள். மேலே சொன்ன யோசனைப்படி செய்தால் உள் நாட்டுத் தானியத் தட்டுப்பாடு ஓரளவு குறையும். இதே போல், தொழிலாளர்களுக்கு உணவு வழங்கும் தனியார் நிறுவனங்களிலும் இறக்குமதிச் சரக்கையே பயன்படுத்தலாம். மற்ற மக்களின் தேவைகளை உள்நாட்டு தானிய வியாபாரிகள் நியாயமான சுதந்திரப் போட்டி முறையில் பூர்த்தி செய்ய விட்டு விட வேண்டும். இவ்வாறு இறக்குமதிச் சரக்கையும், உள்நாட்டு உற்பத்தியையும் முறை செய்து பிரித்து விட்டால் அநேக குழப்பங்கள் நீங்கும். பொதுமக்களுக்குக் கிடைக்கும் அரிசியின் தரம் உயர்ந்து, விலையும் குறையும்.

சர்க்கார், தான் எடுத்துக் கொண்டுள்ள காரியத்தின் தன்மையையும், அளவையும் உணர்ந்தே ஒரு கொள்கையை அமுல் செய்ய வேண்டும். சட்டத்தினாலும், அரசாங்க நிர்வாகத்தின் மூலமும் அகில தேச தானிய விநியோகத்தையும் சீராகச் செய்ய முடியும் என நினைப்பது கண்மூடித்தனமாகும். சர்க்காரிடம் நேரடியாக உணவை எதிர்பார்ப்போருக்கு இறக்குமதி தானியம் வழங்க ஏற்பாடுகள் செய்து, அநாவசியமான சர்க்கார் கையிருப்புக்களைக் குறைத்தாலே நாட்டுக்கு நன்மை ஏற்படும். இதற்கு மாறாக அதிகாரிகளைத் தேசமெங்கும் ஏவிவிட்டிருக்கிறார்கள். கணிசமான கொள்முதல் கணக்குக் காட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் அவர்கள் உற்பத்தியாளர் மீது பாய்ந்து நிர்ப்பந்தம் செய்கிறார்கள். 'கொள்முதலில் நிர்ப்பந்தமேயில்லை' என்று மந்திரிகள் சொல்லிவிட்டால்போதுமா? நிர்ப்பந்தம் இல்லாமல் எந்தக் காரியத்தையேனும் செய்ய உத்தியோகஸ்தர்களுக்குத் தெரியுமா? பெரிய நிலச் சொந்தக்காரர்கள் இருந்தாலேனும் அதிகாரிகளின் நிர்ப்பந்தத்துக்குப் பலன் இருக்கக் கூடும். அவர்களையும் ஒழித்துக் கட்டிவிட்டதால், இன்று தம் குடும்பத்துக்காக விவசாயிகள் சேர்த்து வைத்துள்ள சேமிப்பையும் சர்க்கார் கொள்முதல் செய்து தனது கையிருப்போடு சேர்த்துப் பஞ்ச காலத்தில் பதுக்கல் கைங்கரியத்தை விஸ்தரித்து வருகிறது.

# என்ன சேதி?

## ஒரு பெருமகன் மறைந்தார்

ராஜாஜி எழுதுகிறார்:

'என் மதிப்புக்குரிய நண்பரும், சமூகப் பணித் தோழருமான சேலம் அர்த்தநாரீசுவர வர்மா அவர்கள் சென்ற 7-ம் தேதி திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் மறைந்து விட்டதாகக் கடிதம் வந்தது. பகவான் அவர்கள் ஆன்மாவைத் தன் பொருளாகப் பக்கத்தில் வைத்துக் கொள்வாராக! அர்த்தநாரீசுவர வர்மா அவர்கள் தம் பெருஞ் செல்வத்தைத் தரும மார்க்கத்தில் மக்களை உயர்த்துவதற்காகச் செலவிட்டு மிகப் பெரும் பணி செய்து வந்தார். தாழ்ந்தவர்களை உயர்த்துவது சமூகச் சீர்திருத்தம், உயர்ந்தவர்களைத் தாழ்த்துவது சமூகப் பணியல்ல என்பதை நன்றாக உணர்ந்த மகான். அடக்கத்தையும் தெய்வ பக்தியையும் சத்திய வாழ்க்கையையும் பெரிதாக மதித்த ஒருவர் மறைந்து விட்டார்.'

## நேர்மாறான விளைவு!

சர்க்கார் நியமனம் பெற்ற கடைகளில் விற்கும் அரிசிக்குச் சர்க்கார் என்ன விலை நிர்ணயித்துள்ளதோ அதற்கு குறைவான விலையிலேயே அதைவிட தரமான அரிசி வெளிக் கடைகளில் கிடைப்பதாக வேலூரிலிருந்து செய்தி வந்திருக்கிறது. ரேஷன் கடைகளை அதிகமாக யாரும் நாடாமல் வெளியிலேயே வாங்கிக் கொள்கிறார்களாம். வியாபாரிகளின் போட்டா போட்டியிலேயே நிர்ணயம் பெற வேண்டிய விலையைச் சர்க்கார் தன் பலவந்தத்தில் கொண்டு வந்ததன் விளைவே இது. இதேபோல் உற்பத்தியாளரின் அடக்க விலையைக் கவனியாமலும் அவர்களுக்குப் போதிய லாபம் கிடைக்காமலும் சர்க்கார் விலை நிர்ணயம் செய்து அவர்களைக் கஷ்டப்படுத்துவதும் உண்டு.

சர்க்கார் கட்டுப்பாட்டின் தீய விளைவுக்கு இன்னொர் உதாரணம் ஜவுளித் துறையில் கிடைத்துள்ளது. சென்ற அக்டோபர் மாதத்தில் மில் துணிகளுக்குச் சர்க்காரின் கட்டுப்பாடு வருவதற்கு முன்பு இருந்ததை விட அதன் பின் பல ரக மில் வேஷ்டிகள், சட்டைத் துணிகள், லாங் கிளாத், மல், காடா இவற்றின் விலை கூடுதலாகியுள்ளது!

## நன்றி

என்னுடைய பிறந்த தினம் என்று சொல்லப்படுகிற நாளையொட்டி அன்பான வாழ்த்தும் ஆசியும் கூறியுள்ள எல்லா நண்பர்களுக்கும் எனது நன்றியும் நமஸ்காரமும். தனித்தனியாக நன்றி செலுத்திக் கடிதம் எழுதச் சாத்தியமில்லை. ஒவ்வொரு வாழ்த்துத் தந்தியிலும் கடிதத்திலும் பொழிகிற அன்புக்குப் பிரதியாக நன்றி கூற என் வசம் தகுந்த வார்த்தைகள் இல்லை.

'பிறந்த தினம் என்று சொல்லப்படுகிற நாள்' எனக் குறிப்பிட்டதற்குக் காரணம் சொல்கிறேன்: என் பிறந்த நாள் எது என்பதை என்னால் திட்டமாகக் கூறி உறுதிப்படுத்த இயலவில்லை. 1885ம் ஆண்டில் நான் அந்தக் காலத்து 'லோயர் செகண்டரி'ப் பள்ளியின் முதல் வகுப்பில் சேர்க்கப்பட்டேன். அதற்கு முன் தமிழும் ஆங்கிலமும் கணக்கும் சின்னப் பள்ளிக்கூடத்தில் நன்றாகக் கற்றிருந்திருக்க வேண்டும். 1891 டிஸம்பரில் சென்னை ஸர்வ கலாசாலையின் மெட்ரிகுலேஷன் பரீட்சை கொடுத்து, பாஸ் செய்தேன். நான் பிறந்த வருஷம் 1878 என்ற கணக்கின்படி அப்போது எனக்குப் பதின்மூன்று பிராயம் ஆயிருக்கும். 1896 ஜனவரியில் பி. ஏ. எழுதித் தேர்வு பெற்றேன். 1878 பிறந்த தினம் என்ற அநுமானத்தின்படி அப்போது எனக்கு வயது பதினேழு. அதன் பின் சட்டக் கல்லூரியில் சேர்ந்தேன். 1900வது ஆண்டில் பி. எல். பரீட்சையில் பாஸ் செய்து சேலம் ஜில்லா கோர்ட்டில் வக்கீல் தொழில் தொடங்கினேன். இந்த விவரங்களிலிருந்து என் வயதை உத்தேசமாக கணித்துக் கொள்ளலாம்.

— ராஜாஜி

# ஜெகசிற்பியன்

எழுதும் சமூக நாவல்

# ஜீவகீதம்



விரைவில் ஆரம்பமாகிறது

# உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

# பனாமா



Panama

20

CIGARETTES

Specially blended for a cool and pleasant smoke from selected Virginia Tobacco leaves.

## பனாமா

இழுக்க் இழுக்க இன்பம் இறுதிவரை

பிரத்தியேகத் தயாரிப்பாளர்கள்:
'கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்.
பம்பாய்-56

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

GT-(F) 634 TM

Greens' Advtg.

# பர்மிய மொழியில் வள்ளுவர்

**சா. கணேசன்**

நவம்பர் பதினான்காம் தேதி. ரங்கூன் ராமகிருஷ்ண மிஷன் மண்டபம் ஒரே ஜனத்திரளாகக் காட்சி தந்தது. பர்மிய—இந்திய அரசாங்க அதிகாரிகள், பர்மிய பிட்சுக்கள், இந்திய சந்நியாசிகள், எழுத்தாளர்கள், பத்திராதிபர்கள், பல துறை ஆசிரியர்கள் இப்படியாகக் குறிப்பிடத்தக்கவர்கள் கூடியிருக்கிறார்கள். பர்மா தனவைசியர் கல்விக் கழகம் திருக்குறளைப் பர்மிய மொழியில் வெளியிடுகிறது. அதில்தான் இந்தக் கண்கொள்ளாக் காட்சி.

கழகத் தலைவர் திரு கே. சுப்பிரமணியன் செட்டியார் தலைமையில் இந்தியத் தூதுவர் நூலை வெளியிட்டு முதற் பிரதியைப் பௌத்த பிட்சுவிடம் அளித்து, ''இங்கு நான் பங்கு பெறும் வைபவங்களிலே இதற்கு நிகர் வேறொன்றில்லை'' என்று நீண்டதோர் உரை நிகழ்த்தினார்.

திருக்குறளைப் பர்மிய மொழியில் பெயர்த்த ஊ மியோ தான்ட் அவர்கள் பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கப்பட்டார்.

பர்மா பத்திரிகையாளர் சங்கத் தலைவர் ஊ பா பே, பிரபல எழுத்தாளர் டாக்டர் மவுங் பிவூ, தமிழர் சங்க முன்னாள் தலைவர் திரு எஸ். லட்சுமணன் ஆகியோர் மொழி பெயர்ப்பாளரையும் மொழிபெயர்த்து இலவசமாக வழங்கும் தனவைசியர் கல்விக் கழகத்தையும் பாராட்டிப் பேசினார்கள்.

பர்மாவிலிருந்து தமிழர்கள் வெளியேற்றப்பட்டாலும், ''இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு'' என்ற வள்ளுவர் கட்டளைப்படியே தமிழர்களின் அறப்பெரும் நூலான திருக்குறளைப் பர்மியர்கள் அனைவருக்கும் உரிமையாக்கிக் கொடுத்த இந்த அருமைப் பணியை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இன்னும் பல அருமையான தமிழ் நூல்களையும் பர்மியர்கள் கற்று நல் வாழ்வு பெறத் தனவைசியர் கல்விக் கழகம் உதவ வேண்டும் என்று கூறி வாழ்த்துகிறோம்.

ரங்கூன் ராமகிருஷ்ண மிஷன் மண்டபத்தில் திருவள்ளுவர் பெருமானின் திருவுருவம் திறந்துவைக்கப்பட்டது. விழாவில் பர்மா பத்திரிகையாளர் சங்கத் தலைவர் ஊ பா பே கலந்துகொண்டார். திருக்குறளைப் பர்மிய மொழியில் ஆக்கித் தந்த ஊ மியோ தான்ட் பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கப்பட்டதும் நன்றி உரை நிகழ்த்துகிறார்.






## 7. திருக்கல்யாணம்

இமவான் தன் சுற்றத்தாருடன் சுவாமியையும், பரிவாரங்களையும் எதிர் கொண்டு வரவேற்று வணங்கினான். தனது தலைநகரமான ஔஷதிப்பிரஸ்தத் திற்கு அவர்களை அழைத்தேகினான். இருடிகள் பலர் பூரண கும்பங்களை ஏந்திக் கொண்டு வந்தார்கள்; மகளிர் வட்டமங்கலங்களைக் கொண்டு வந்து காட்டினார்கள். நீராஜனம் சுற்றி னார்கள்.

ஐயன் மாப்பிள்ளைக் கோலம் கொண்டு மனம் கவரும் சௌந்தரி யத்தோடு வீதி வழியே வந்த விமரி சையைக் கச்சியப்பர் கற்கண்டான கவிதைகளால் வருணிக்கிறார். திவ்விய வஸ்திரமும்,. திரு ஆபரணங்களும், மணக்கும் சந்தனமும், மாமலர் மாலை களும் அணிந்து வரும் ஐயனைக் கண்டு இந்த ஆடைகளும், அணிகளும் சாந்துப் பூச்சும், சுகந்தப் பூக்களும் அவரது திருமேனியின் அழகை மறைத்துத் தொலைக்கின்றனவே என்று கண்டோர் வருந்துகிறார்களாம்:

நிறைத்த பூண்களும்
  நேர்ந்த பொன்னுடையும்
நறைத்த சாந்தமும்
  நாண்மலர்க் கண்ணியும்
பிறைத்த சூச்சடைப்
  பித்தன் பேரெழில்
மறைத்த தென்று
  மனம் தளர்வார் சிலர்

மணக் கோலத்தில் மாப்பிள்ளையைப் பார்க்க வேண்டும் என்று மாமியார் விரும்புவது இயற்கையல்லவா? மாப் பிள்ளை அழைப்பின்போது மருமகனைக் காணத் துடித்தவாறு உப்பரிகையில் நின்று கொண்டிருந்தாள் மேனை. அங்கே நாரதர் சென்றார்.

''ஊர்வலத்தில் அதோ பூத கணங் களுக் கிடையே சிவப்பாய் வருகிறாரே, அவர்தானே மாப்பிள்ளை?'' என்று கேட்டாள் மேனை.

''நன்றாக இருக்கிறது. கள்ளிச் செடியைப் பார்த்துக் கற்பகமா என்று கேட்டாளாம் ஒருத்தி. அவரல்ல மாப்பிள்ளை'' என்றார் நாரதர்.

பூத கணங்களை அடுத்து ஊர்வலத்ல் மற்றொரு திருக் கூட்டம் வந்தது. ந்தக் கூட்டத்தைக் கண்ட மேனை நாரதரே! அங்கே கூட்டத்தின் த்தியில் வருகிறாரே, அவர்தானே ாப்பிள்ளை?'' என்று கேட்டாள்.

''நன்றாயிருக்கிறது! காடித் தண்ணீரைப் பார்த்து, அதுதான் காமதனுவின் பாலா என்று கேட்டாளாம் ஒருத்தி. அவரல்ல அம்மா மாப்பிள்ளை. அவர் உருத்திரர்.''

அதையடுத்து மற்றொரு திருக் கூட்டம் வந்தது. அந்தக் கூட்டத்தைக் கண்ட மேனை, ''நாரதரே! அந்தக் கூட்டத்தில் அதோ வருகிறாரே, அவர்தானே மாப்பிள்ளை?'' என்று கேட்டாள்.

''மாட்டுக் குளம்பு நீரைப் பார்த்து மகா சமுத்திரம் என்றாளாம் ஒருத்தி. அதுபோல் அல்லவா இருக்கிறது உங்கள் கேள்வி. அவர் மாப்பிள்ளை அல்ல; ஸ்ரீகண்டருத்திரர்.''

கடைசியில் சிவபிரானே மாப்பிள்ளைக் கோலத்தில் வந்தார். அவரைப் பார்த்த மேனை, 'இவர்தானே மாப்பிள்ளை?' என்று கேட்கவில்லையாம்; தானாகவே புரிந்து கொண்டாளாம்.

உண்மையைக் காணுமளவும் எது மெய், எது பொய் என்று சந்தேகம் தோன்றிக் கொண்டே இருக்கும்; சத்தியத்தைத் தரிசித்தவுடனே சந்தேகம் மறைந்து விடுகிறது, உண்மைக்கு அத்தாட்சி வேறெங்கோ இல்லை; அதிலேயே இருக்கிறது.

திருமணச்சாலை வந்தவுடனே சிவபெருமான் இடபம் விட்டு இறங்கியருளினார். மேனை அரம்பையர்களோடு வந்து எம்பெருமானுடைய இணையடிகளைக் காமதேனுவின் பாலினால் அபிடேகம் செய்து வணங்கிச்



சென்றான். சிவபெருமான் திருநந்தி தேவர் கொண்டு வந்து வைத்த பாதுகையின் மேல் தமது தங்கத் திருவடிகளை வைத்தார். இரு புறத்தும் திருமாலும் பிரமாவும் மாப்பிள்ளைத் தோழர்களாகக் கைகொடுக்க, அரனார் தம் திருக் கரங்களால் அவற்றைப் பற்றிக் கொண்டார். மங்கல வாத்தியங்கள் ஒலிக்க, கணங்கள் ஆரவாரிக்க எம்பெருமான் திருமணக் கோயிலினுட் சென்றார். ஆங்குள்ள அழகுகள் அனைத்தையும் திரு நந்தி தேவர் விளக்கிக் காட்டச் சிவ பெருமான் பார்த்து மகிழ்ந்தருளினார்.

பின்னர் எம்பெருமான் திருமண மண்டபத்தினுட் சென்று தமக்கென அமைக்கப் பட்டிருந்த இந்திர நீல மணித்தவிசின் மீது வீற்றிருந்தருளினார். யாவரும் நன்கு காணப் பொது இடத்தில் பெருமான் பொருந்திய அருளை எண்ணிய கச்சியப்பர், மறைகளுக்கும் மறைந்து நிற்பவர் எல்லார்க்கும் பொதுவில் எழுந்தருளினார் என்கிறார். அவருடன் அரி, அயன், ஆகண்டலனாதி அமரர்களும், முனிவர்களும் தத்தம் ஆசனத்தில் சூழ்ந்து அமர்ந்திருந்தார்கள்.

பார்வதி — பரமேசுவரன் திருமண வைபவம் காண, எல்லாப் புவனங்களில் உள்ளவர்களும் வந்து கூடினதால் இமய மலை வருந்தி நடுங்கியது. பூமியின் வடகோடு தாழ்ந்து, தென் கோடு உயர்ந்தது. தேவர் முனிவர் யாவரும் அதனைக் கண்டு அஞ்சி, சுவாமியிடம் பிரார்த்தித்தனர். எம்பெருமான் புன்னகை புரிந்தார். அகத்திய முனிவரை அழைத்து வருமாறு நந்தித் தேவருக்குக் கட்டளையிட்டார். அகத்தியர் உடனே வந்து வணங்கி நின்றார்.

“அகத்தியனே! எல்லோரும் இங்கு வந்து கூடினதால் வட கோடு தாழ்ந்து தென் கோடு உயர்ந்து விட்டது. இதனால் சுவர்க்கம் மிகவும் தாழும். மேரு மலையும் நிலை தவறும். இதனைச் சமன் செய்ய நீ உடனே தென்னாட்டில் உள்ள பொதிய மலைக்குச் செல்” எனச் சிவபெருமான் பணித்தார்.

அகத்தியர் உருவில் சிறியவராயினும் உள்ளுற அவ்வளவு பலம் படைத்திருந்தார். ஆயிரம் பொதி பஞ்சின் நிறையை ஒரு சிறு தங்கக் கட்டி ஈடு செய்வது போல், ஆன்மாக்கள் அடங்கலாகப் பிரபஞ்சம் முழுவதற்குமுள்ள நிறையை அகஸ்தியர் ஒருவரே பெற்றிருந்தார். உலக மெங்கும் நிறைந்த உறு பொருளை உள்ளத்தில் வைத்திருந்ததால் தான், இவ்வளவு நிறை பெற்றிருந்தாரோ? அவரது தவத்தின் நிறையோ அது? அல்லது அவர் தந்த தமிழின் நிறையோ?

பெருமான் ஆணையைக் கேட்டு அகஸ்தியர் பெருமை கொள்ளவில்லை. மனம் வருந்தி, “பரம கருணாநிதியே! அடியேன் என்ன குற்றம் செய்தேன்? தங்கள் திருமணக் காட்சியைக் காண வேண்டாமா?” என்று வேண்டினார்.

“நீ சற்றும் தயங்காது பொதிய மலை செல். நாம் அங்கு வந்து நமது திருமணக் கோலத்தைக் காட்டுவோம். நீ மகிழ்ந்து தரிசிக்கலாம்” என்று சிவபெருமான் கூற, அகத்தியர் இறைவன் திருவடிகளை வணங்கி, துதித்துத் தென் திசையை நோக்கிச் சென்று பொதிய மலையை அடைந்தார். பூமி சமன் ஆகியது. ஆன்மாக்களின் அல்லல் நீங்கியது.

இமவான் உமையை அழைத்து வருமாறு ஏவினான். தேவ மாதர் பணி செய்யப் பார்வதி தேவியார் மண மண்டபம் எய்தினார்.

**அங்கது பொழுது தன்னில்**
**அரசன்திசைவா ளெங்கள்**
**சங்கரி ஐயை காப்பச்**
**சசியெனும் அடைப்பை யேந்தக்**
**கங்கைகள் கவரி வீசக்**
**காளிகள் கவிகை பற்றப்**
**பங்கய மாதைப் பற்றிப்**
**பாரதி பரவ வந்தாள்**

ஐயையாகிய துர்க்கை காக்க, சசியாகிய இந்திராணி தாம்பூலம் தாங்க, வானுலகிலும் மண்ணுலகிலும் பாதாளத்திலும் பாயும் மூன்று கங்கைகள் சாமரம் வீச, காளிகள் குடை பிடிக்க, இலட்சுமி கைகொடுக்க, சரஸ்வதி துதிக்கப் பார்வதி தேவி எழுந்தருளி வந்தார். சிவபெருமானின் திருவடிகளை வணங்கினார்.

“தேவி! நம் பக்கத்தே இருக்கக் கடவாய்!” என்று தேவ தேவன் தேவியைப் பணித்தருள, பார்வதி தேவி எம்பெருமான் பக்கத்தில் எழுந்தருளினார். மேனை கரகத்தினின்று நீர் வார்க்க, இமவான் சிவபெருமான் திருவடிகளை விளக்கி, சந்தனத்தாலும் நறுமலராலும் பூசித்து, உமா தேவியாரின் கர மலரை இறைவன் திருக் கரத்தில் வைத்து, “அடியேனது புதல்வியைத் தங்கட்குத் தந்தேன்” என்று தாரா தத்தம் செய்தான்.

அரம்பையர் ஆடினர்; சித்தர்களும் கந்தர்வர்களும் தும்புரு நாரதரும் இசை பாடினர்; தேவர்களும் முனிவர்களும் வேதம் ஓதினர். இலட்சுமி


SUNLIGHT
Soap

யும், சரஸ்வதியும் மங்கலப் பாடல் ஓதினர்; பூதர்கள் நானாவித வாத்தியங்களை முழக்கினர்; விண்ணவர் தண் மலர் சொரிந்தனர். இமவான் பசும் பால், நெய், தேன், மா, கதலி, பலா முதலியவற்றை ஒரு பாத்திரத்திலிட்டுத் திரு அமுது செய்யும்படி இறைவனை வேண்டினன். கண்ணுதற் கடவுள், மகிழ்ந்து, ''நாம் இவற்றை அமுது செய்தாற்போல் உவந்தோம்; நீ எடுத்துக் கொள்வாய்'' என்று தம் திருக் கரத்தினால் தொட்டுத் திருவருள் புரிந்தார். இமவான் அந்த நிருமாலியத்தைக் கொண்டு போய், மலர் கந்தம், நீர் இவற்றோடு ஒரு புறத்தில் சேமித்து வைத்தான்.

பிரம தேவர் சிவபெருமானை வணங்கினர். ''தேவ தேவ! விண்ணவரும் மண்ணவரும் மண விதியை உணர்தற் பொருட்டு, சர்வ லோக நாயகராகிய தேவரீர் அடியேன் சாஸ்திரோக்தமாகத் திருக்கல்யாணம் நடத்தி வைக்க அனுமதி தரவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். முக்கண்ணர் முறுவல் செய்து அதற்கு அனுமதி யளித்தார்.

வியாழ பகவான், சுக்கிராச்சாரியார் முதலியோர் அருகே சூழ, மணச் சடங்குகளை நடத்தப் பிரமதேவர் புரோகிதராக அமர்ந்தார். மண வினைக்கு மஞ்சள் பிள்ளையார் பிடித்து வைக்கவில்லை. சாட்சாத் விநாயகரே வந்து அமர்ந்தார். ஒரு புரட்சிக் கல்யாணம். தாய் தந்தை திருமணத்தில் பிள்ளையே வந்து உட்கார்ந்திருந்தான். என்றுமுள்ளவன் அல்லவா கணநாதன்? அவனைச் சிவகுமாரன் என்றும் உமை மைந்தன் என்றும் சொல்வது அவனது ஞானம், கருணை இவற்றின் பெருமைக்காகவே அன்றோ?

மணவினைச் சடங்குகள் இனிது முடிந்தன. உலகையெல்லாம் கைவிடாது காக்கும் அகிலாண்ட நாயகியை எம்பெருமான் கைப்பற்றினர்.

தேவர்கள் பூமாரி பொழிந்தனர். இமவான் பொன் மழை பொழிந்தான். பிறகு தேவியை அம்மி மிதிக்கச் செய்து அருந்ததி காட்டி அனுக்கிரகம் புரிந்தார் பகவான். இமவான், சிவநிருமாலியமாகிய தீர்த்தம், சந்தனம், மலர் முதலியவற்றை அனைவர்க்கும் வழங்கினன். அனைவரும் அவற்றை உள்ளன்போடு பெற்று உட்கொண்டுஅணிந்துபெருமகிழ்வுற்றார்கள்.

சிவபெருமான் திருமணம் புரிந்த திருக்கோலத்தில் பார்வதி தேவியுடன் வீற்றிருந்தார். கணவனை இழந்த ரதி தேவி, சிவபெருமானிடம் வந்து வணங்கினள். ''சுவாமி! தேவரீர் அம்பிகையோடு கூடி வீற்றிருப்பதால் நான் என் கணவனை அடையுமாறு அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டினள். அருளைப் பெறுவதற்கு எப்பேர்ப்பட்ட அருமையான சந்தர்ப்பத்தைத் தேடி எடுத்தாள், பாருங்கள்!

சிவபெருமான், மன்மதன் வந்து தோன்றுமாறு தம் திருவுளத்தில் சிந்தித்து அருள் புரிந்தார். ரதிதேவி எல்லையில்லா மன மகிழ்ச்சி பெற, எரிந்து போன மன்மதன் மீண்டும் அங்கு வந்து தோன்றினன்.

நன்மை மட்டுமுள்ள வானுலகைச் சேர்ந்த தேவர்கள் நன்மையிலேயே கவனமாயிருப்பதால் முக்திக்கு முயல்வதில்லை; இறைவனையும் நினைப்பதில்லை. இதற்காகவே அசுரர்களைக் கொண்டு அவர்களைத் துன்புறுத்தி ஆண்டவன் அவர்களைத் தம்பாற் படுத்திக் கொள்வார். மண் உலகிலோ இத்தகைய வெளிப் பகையோடு, உட்பகையாகிய ஆசை முதலிய தீமைகளும் உள்ளன. தீமையை விலக்குவதற்காகத் தெய்வ அருள் நாடப்படுகிறது. அதில் பிறக்கும் ஞானத்தினால், அதன்பின் தீமை நன்மை இரண்டுக்கும் அப்பாற்பட்ட திருநிலைக்கு முயற்சி செய்யப்படுகிறது. ஆகவே உலகம் உள்ளளவும் அதில் தீமையும் இருந்து, உலக வாழ்வின் மாயத் தன்மையை நினைவூட்டிக் கொண்டேதான் இருக்கும். இதனால்தான் போலும், எரிந்து போன ஆசைத் தீமையை மீண்டும் எம்பெருமான் உயிர்ப்பித்தார்.

இறைவனை வணங்கினன் மதனன். ''கிருபாநிதியே! அடியேனது குற்றத்தைப் பொறுத்தருள்க'' என்று துதித்தான். எம்பிரான் மன்மதனை நோக்கி, ''நீ ரதியின் கண்ணுக்கு மட்டும் தெரியும் மன்மதனாகவும் மற்றவர் கண்ணுக்குத் தெரியாத அனங்கனாகவும் -(அங்கமில்லாதவன்) விளங்குவாய். உண்மையான சிவனடியார்பால் உன் ஆட்சி செல்லாது; மற்றவர்பால் செல்லும்'' என்று அவனுக்குரிய அரசையும் ஆற்றலையும் தந்து கருணை பாலித்தார். மன்மதன் சிவபெருமானின் அருளைப்பெற்று வணங்கி, ரதி தேவியுடன் தனது நகரத்துக்குச் சென்றான்.

சிவபெருமான் உமாதேவியோடு மணத்தவிசினின்று எழுந்து, மறை ஒலியும் மங்கல முழவும் முழங்க விடைபெற்று விடையின் மீது எழுந்தருளித் திருக்கயிலாய மலையடைந்தார். உடன் வந்தோருக்கெல்லாம் விடைகொடுத்து அனுப்பி விட்டு, திருக்கோயிலினுட் சென்று உமாதேவியுடன் அரியணையில் வீற்றிருந்தார்.

இப்படிச் சொல்வதால் சக்தி வேறு; சிவம் வேறு என்று கொள்ளக் கூடாது. சக்தியும் சிவமும் ஒன்றேதான். சக்தி புலப்படும்; சிவம் புலப்படாது. மனித னுடைய உடல் சக்தியும் சிவமும் சேர்ந் ததுதான். உடம்பில் உள்ள சூடு சிவம்; தட்பம் சக்தி. சக்தியும், சிவமும் சேர்ந் தால்தான் எச்செயலும் எவ்வடிவும் தோன்றும். அதனால்தான் அவற்றின் சேர்க்கையைத் திருக்கலியாணம் எனச் செய்து காட்டுகிறார்கள்.

ஆன்ம சம்பந்தமான திருமணம் புரிந்து கொண்ட ஈசனும் தேவியுமான மணமகனும் மணமகளும், இருவருமே முன்போலத் தவநிலையில் ஒடுங்கி விட் டார்கள்.

பார்வதி தேவியாரது திருமணம் நிகழ்ந்து பற்பல நாட்கள் சென்றும் இறைவன் ஒரு குமரனைத் தந்தருளாது இருத்தலைக் கண்ட திருமால், திசை முகன், இந்திரன், திக்குப் பாலகர்கள் முதலிய வானோர்கள் மேரு மலையில் ஒன்றுகூடி ஏங்கியிருந்தனர். நம்மை ஏன் இறைவன் இன்னமும் சோதிக்கிறார் எனக் கலங்கினர்.

ஒரு தாய் ஆரோக்கியமான பிள்ளைக்கு நிரம்ப உணவு தருவாள்; நோய்வாய்ப் பட்ட மகனுக்கு உப்பில்லாக் கஞ்சி தருவாள்; மந்தம் உள்ள பிள்ளைக்குப் புனர்ப்பாகம் செய்து தருவாள்; நேர் வானம் உண்ட பிள்ளையைப் பட்டினி போடுவாள். இதற்குக் காரணம் குழந்தைகளின் நோயேயன்றித் தாயின் பட்சபாதம் அன்று.

கல்லூரியில் பரீட்சை நடக்கிறது. எல்லா மாணவர்களும் கேள்விக்கு விடை எழுதுகிறார்கள். நன்றாக எழுதிய மாணவர்களுக்கு ஆசிரியர் அதிக அம் சங்கள் தருகிறார். நன்றாக எழுதாத வர்களுக்குக் குறைந்த அம்சம் தரு கின்றார். கேள்வித்தாள் இருந்து கின்ற ஆசிரியர் பாரபட்சம் காட்டு கிறார் என்று சொல்லி விட முடியுமா?

இவறலும் இகலும் இன்றி
  யார்க்குமோர் பெற்றித்தாகி
அவரவர் வினைகள் நாடி
  அதற்படு பொருளை நல்கும்
சிவனை யாம் வெறுத்தல் குற்றம்
  சிறந்த நோன்பு இயற்றிடாதே
தவறு செய்தனம் என்றெம்மை
  நோவதே தக்கதென்றார்

இறைவன் ஆன்மாக்கள் செய்த நல்வினை, தீவினைகளுக்குத் தக்கபடி இன்ப துன்பங்களை வழங்குகிறான். இதனைப் பிரம்மதேவர் மற்ற வானோர் களுக்கு உணர்த்தினார்.

அனைவரும் திருக்கயிலாயம் சென்று தமது துன்பங்களைச் சிவபிரானிடம் விண்ணப்பம் செய்வதென உத்தேசித்த னர். பிரமதேவர், சிவபெருமான் எந்நிலை யில் உள்ளார் என்பதை ஒரு தூதுவன் மூலம் அறிந்து, பின்னர் செல்வோம் என்று கூறி, வாயு தேவனை அனுப்பி வைத்தார். 'மன்மதனை எரித்த சிவ பெருமான் முன் செல்வதா?' என நடுங்கியவாறே வாயுவும் சென்றான்.

கங்கையில் நீராடிவிட்டு, தாழம் பூவின் மகரந்தங்களை அணிந்து பய பக்தியுடன் தென்றலாய் மெல்லக் கயி லாயம் சென்றான் வாயு; இறைவன் திருக் கோயிலின் முன்வாயிலை யடைந்தான். நந்தி தேவர், ஒரு ஹுங்காரம் செய்ய இடியொலி கேட்ட நாகம் போல் வாயு தேவன் மயங்கிக் கீழே விழுந்தான். ஒருவாறு மயக்கம் தெளிந்து நந்தி யெம்பெருமானிடம் சென்று, தான் வந்த காரியத்தைத் தெரிவித்தான்.

ஈசுவரனின் நிலையை நோட்டம் பார்ப்பது தகாத காரியம். அவனது நிரந்தர நிலை அனுக்கிரகம்தான். வேண்டி நிற்கும்போதெல்லாம் அருள் புரிவான் என்ற நம்பிக்கை யொன்றே வேண்டும். எனவே பரமனின் நிலை காண வந்த வாயுவை வெருட்டி விட்டார் நந்தி தேவர்.

வாயு தேவன் மேரு மலைக்குத் திரும்பி வந்து, பிரம்ம தேவரிடம் கயி லாயத்தில் நடந்ததைச் சொன்னான். தேவர்கள் யாவரும் ஆண்டவனைத் துதித்து அருள் கோரிக் கயிலாய மலை சென்றனர். திருநந்தி தேவரை வணங்கி அவர் அனுமதி பெற்று உள்ளே சென் றனர். திருமாலும் மற்றோரும் பர மேசனைப் பலகாலும் பணிந்து தமது குறைகளைக் கூறி முறையிட்டனர்.

''எம்பெருமானே, சூரபன்மனுதியர் களால் பெருந்துயருறுகிறோம். எங் களை இத் துயரத்திலிருந்து விடுவிக்க உமக்கு ஒப்பாக ஒரு திருக்குமரரைத் தந்தருளுக'' என்று தேவர்கள் வேண் டிக் கொண்டனர்.

ஆதியும் நடுவும் ஈறும்
  அருவமும் உருவும் ஒப்பும்
ஏதுவும் வரவும் போக்கும்
  இன்பமுந் துன்பமும் இன்றி
வேதமும் கடந்து நின்ற
  விமலஓர் குமரன் தன்னை
நீதரல் வேண்டும் நின்பால்
  நின்னையே நிகர்க்க என்றார்

(தொடரும்)

## குழந்தையின் மார்புச் சளியை அகற்ற...

குழந்தையின் வளர்ச்சிக்கு சத்தான உணவு எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம், ஆழ்ந்த நித்திரையும். ஆகவே மார்பு சளியினால் இரவெல்லாம் தூக்கமின்றி உங்கள் குழந்தை சிரமப்பட விடாதீர்கள். இதமான அனேலியத்தை அவன் மார்பில் தடவுங்கள். விரைவில் குணமடைந்து அவன் அமைதியாகத் தூங்குவான்; காலையில் ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் துயில் எழுவான்.

அனேலியத்தின் சக்திவாய்ந்த மருந்துகள் ஜலதோஷம், தலைவலி, சுளுக்கு மற்றும் தசைவலியைத் துரிதமாகக் குணப்படுத்துகின்றன. நீங்களும் அதைப் பயன்படுத்தலாம். எப்போதும் கைவசம் ஒரு டியூப் வைத்திருங்கள்.




அனேலியம்

சிக்கனமான, கச்சிதமான 'டின்'னிலும் கிடைக்கிறது




# அனேலியம்

விரைவாகப் பலனளிக்கும் இதமான வலிநிவாரணி

அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-டெல்லி




# ஒரு தனிப்பட்ட வியாபாரி சென்னப்பன் பட்டினத்தில் இறங்குகிறார்

செயின்ட் ஜார்ஜ் கோட்டையும் அதைச் சுற்றி சிறு சிறு குடிசைகளடங்கிய சென்னப்பன் பட்டினம் மற்றும் வட சர்க்கார் பகுதிகள் அடங்கியதுதான் 1788ல் இருந்த சென்னை ராஜதானி. இந்த வருஷத்தில்தான் தாமஸ் பாரி என்பவர் இங்கிலாந்திலிருந்து அலுப்பு தரும் ஆறு மாத கப்பல் பிரயாணத்தை முடித்துக் கொண்டு, சென்னப்பன் பட்டினத்தில் இறங்கி, ஒரு தனிப்பட்ட வியாபாரியாக, பற்பல பண்டங்களின் விற்பனையில் ஈடுபட்டார்.

176 ஆண்டுகளுக்குப் பிறகு, தான் ஆரம்பித்துள்ள ஸ்தாபனம், தேசத்தின் பொருளாதாரத் துறையில் இத்தனை வகைகளில் பெரும் பங்கு கொள்ளும் என கனவு கண்டிருக்கக் கூடுமா? ரசாயன உரங்கள், சர்க்கரை, மிட்டாய் தினுசுகள், தொழிற் துறைகளுக்குத் தேவையான ஆல்கஹால், கெமிகல்கள், ஆசிட்கள் மற்றும் சானிட்டரி சாமான்கள் தயாரிப்பதிலும், பயிர்களைப் பாதுகாக்கும் பண்டங்கள், இலேசான மற்றும் கனரக இயந்திரங்கள், மருந்துகள் தயாரிக்கும் பண்டங்கள், மற்றும் வீட்டு உபயோகத்திற்குத் தேவையான பண்டங்களை இந்தியா முழுவதும் வினியோகித்தல் மற்றும் இன்ஷ்யூரன்ஸ், கப்பல் அலுவல்கள்.


THOMAS PARRY

இ. ஐ. டி. பாரி லிமிடெட், பாரி & கோ., லிமிடெட், மற்றும் பல துணை கம்பெனிகள், கூட்டுக் கம்பெனிகள் ஒருங்கே சேர்ந்த ஒன்பது ஸ்தாபனங்கள் கொண்டதுதான் இன்றைய இ. ஐ. டி.-பாரி குரூப். இந்த ஸ்தாபனம் 10,000 பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கிறது.

தேசத்தின் பொருளாதாரத் துறையில் பூரண சுதந்திரம் அடையவும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் தன் முழு பங்கை உணர்ந்து இந்த ஸ்தாபனம் பொறுப்புடன் பணியாற்றுகிறது. நாளுக்கு நாள் வளர்ந்து வருவதுடன், வேலை வாய்ப்பு வசதிகளையும் அதிகம் தருகிறது.

## இ. ஐ. டி. - பாரி குரூப், மதராஸ்

தேசத்தின் பாதுகாப்புப் பணியில் உங்கள் கடமையைச் செய்யுங்கள்

FDS/PP/364

# பொழுது புலர்ந்தது

பொழுது விடிந்தது. மாதா கோவிலில் மணி அடித்தது. முட்டைக்காரி மேரி தனது தள்ளாத வயதிலும், முட்டைக் கூடையுடன் ஆரம்பப் பள்ளிக் கூடத்துக்கு எதிரேயிருக்கும் சாயாக் கடை அருகே வந்து கொண்டிருந்தாள். அவள் காலை ஒரு பக்கமாகச் சாய்த்துச் சாய்த்து நடப்பதே குழந்தைகளுக்கு வேடிக்கையாக இருக்கும். ''முட்டைக்காரப் பாட்டி'' என்று மேரியிடம் எல்லாருக்குமே ஒரு மதிப்பு உண்டு. குழந்தைகளிடம் அவள் பொக்கை வாயைத் திறந்து சிரித்துச் சிரித்துப் பேசுவாள். கடைத் தெருவில் விற்கும் முட்டையைவிட மலிவாகவே தனது வாடிக்கைக்காரர்களுக்கு முட்டை கொடுத்து வந்தாள் மேரி. அவள் கொடுக்கும் முட்டைகளில் பழுது சொல்லி இதுவரையில் யாருமே குறைப்பட நேர்ந்ததில்லை.

விடியற்காலை ஐந்து மணிக்கே முட்டைக் கூடையுடன் வீட்டை விட்டுக் கிளம்பி விடுவாள். வக்கீல் வீடு; வாத்தியார் வீடு; டாக்டர் வீடு என்று வாடிக்கைக்காரர்களுக்கு முட்டையைக் கொடுத்து விட்டுச் சரியாக ஏழு மணிக்கு ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் எதிரே இருக்கும் அஹம்மதின் 'சாயா'க் கடைக்கு வந்து விடுவாள் மேரி. இருபத்தைந்து முட்டையை அந்தக் கடைக்குக் கொடுத்துவிட்டு அஹம்மது மனம் கனிந்து ''பாட்டி! வெறும் வயிற்றோடு வந்திருக்கிறாயே இந்தா, சாப்பிடு'' என்று அனாக் கோப்பைச் சாயா கொடுப்பதையும் வாங்கி ஊதி ஊதிக் குடித்து விட்டு, ''மகனே! உன்னைக் கர்த்தர் காக்கட்டும்'' என்று வாழ்த்துவாள். இது என்றும் நடக்கும் நிகழ்ச்சி.

சாயாக் கடையிலிருந்து கிளம்பும் போது கூடையில் நாலு முட்டைகள் என்றும் மீதமாயிருக்கும். இரண்டு முட்டைகளை மாதாகோயில் பாதிரியாருக்குக் கொடுத்து அவரை வணங்கி விட்டு மீதி இரண்டை அவள் கணவன் ஜார்ஜுக்கென்று வீட்டுக்கு எடுத்துச் செல்வாள்.



ஜி.கே.பொன்னம்மாள்

அந்த நாளில் ஜார்ஜ் மாதா கோயிலில் பிரார்த்தனைப் பாட்டுக்களுக்குப் பிடில் வாசிக்கும் வேலையில் இருந்தான். அவன் பிடில் வாசித்துக்கொண்டே இனிய குரலில் பிரார்த்தனை கீதங்கள்பாடுவது மிக நன்றாக இருக்கும். அவனுக்கு இப்பொழுது வயதாகி விட்டது. தொண்டையும் நன்றாக இல்லாமல் குரலும் கெட்டு விட்டது. கைகால்கள் அவனுக்கு வலுவற்றுப் பிடில் வாசிக்கக்கூட முன்போல் முடியவில்லை.

அவனுக்கு ஒரே மகன் 'ஜோனி'. குழந்தை நாளிலிருந்தே தந்தையின் சங்கீத ஞானம் அவனுக்குக் கிட்டியிருந்தது. பிடிலும் சுமாராக வாசிப்பான். அவனுக்குப் பதினெட்டு வயதானதுமே சைமன் பாதிரியார் கூட ''ஜார்ஜ்! உன் வேலையை உன் பிள்ளைக்கே கொடுத்து விடுகிறேன்'' என்றார். ஜார்ஜுக்குக்கூடச் சுலபமாக ஒரு வேலை பிள்ளைக்குக் கிடைப்பதில் மிக்க மகிழ்ச்சிதான். ஆனால் பிள்ளை ஜோனி பிரார்த்தனைப் பாட்டுக்களைப் பிடிலில் வாசிக்காமல் டீக்கடை வாசல்களிலும், ஹோட்டல் வாசல்களிலும் நின்று இசைத் தட்டுக்களைக் கேட்டு சினிமா பாட்டுக்களையே வாசித்துப் பழகிக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் தந்தையின் பிடிலை வைத்துக் கொண்டு காதல் மயமான ஒரு சினிமாப் பாட்டை இசைத்து, அந்த இசையில் தன்னையே மறந்திருந்தான். இதைக் கேட்டுக் கொண்டே வந்த ஜார்ஜ் கோபத்துடன், ''அட, உருப்படாத பயலே! இப்படிக் கன்னா பின்னாவென்று வாசிக்கக் கூடாது என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன். இந்த அற்பமான பாட்டுக்களை இசைக்க அல்ல இந்த வாத்தியம். இறைவன் புகழைப் பாடும் கீதங்களைத் தவிர வேறு எதையும் இதால் இசைக்கக் கூடாது'' என்று பிடிலைப் பிடுங்கி வைத்து விட்டு ஆத்திரத்தால் அவன் தாடையில் நாலு அறை அறைந்தான்.

ஜோனி மிகவும் முற்போக்குவாதி. சொற்ப சம்பளத்தில் அந்தப் பட்டிக்காட்டு ஊரில் அல்லல்பட அவன் தயாராக இல்லை. அன்று இரவே யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டுக் கிளம்பி விட்டான். கிழவி மேரி தலையில் அடித்துக் கொண்டு அழுதாள். அவளுக்கு எப்படித் தேறுதல் சொல்வது என்று தெரியாமல் தவித்தான் ஜார்ஜ்.

சீஸன்களுக்கிடையே ஓராண்டு ஓடி மறைந்தது. ஒரு நாள் திடுதிப்பென்று சில்க் சட்டையும், டுவீட் பேண்டும், பளபளக்கும் அழகிய கிராப்பும், கழுத்தில் தங்கச் செயினுமாக வாட்ட சாட்டமாக, பெட்டி படுக்கைகளுடன் கையில் ஒரு புத்தம் புது ஜெர்மன் பிடிலுடனும் தன் வீட்டுக்கு முன்னால் வாடகை மோட்டாரை விட்டு இறங்கினான். அழகிய யுவனைத் தன் பிள்ளைதான் என்று தெரிந்து கொள்ளவே அந்தக் கிழத் தம்பதியினருக்குச் சற்று நேரமாயிற்று. பிள்ளையைப் பார்த்து மகிழ்ந்தாள் கிழவி. சென்னையில் பிரபலமாக இருக்கும் ஒரு சினிமா சங்கீத டைரக்டரிடம் தான் பணியாற்றுவதாகவும், தற்போதைய சினிமாப் படங்களில் எல்லாம் தன்பிடில் ஓசை ஒலிப்பதாகவும் ஜோனி சொன்னான். கை நிறையப் பணத்துடன் வந்த பிள்ளை ஒழுகும் வீட்டுக் கூரையை வேய்ந்தான். பெரிசாக வலைக் கம்பி பின்னிய ஒரு கோழிக்கூட்டை வாங்கினான். தாய்க்கும் தந்தைக்கும் நல்ல உடைகள். இப்படி எத்தனையோ செய்தான். ஜோனி பிடில் வாசிக்கும்போது அவன் கைவிரல்கள் பிடில் நரம்புகளில் அனாயாசமாகத் துள்ளி விளையாடி இந்திர ஜால இசைகள் எழுப்புவதைப் பார்த்து வியந்தான் ஜார்ஜ். மகனை மேரி மாதா கோவிலுக்கு அழைத்துப் போய்ப் பாதிரியாரிடம் ஆசி பெறச் செய்தாள். சைமன் பாதிரியார் மகிழ்ச்சியுடன், ''பரவாயில்லை. கர்த்தர் அருளால் உன் பிள்ளை முன்னுக்கு வந்து விட்டான். வயதான தாய் தகப்பன் கரங்களுக்கு என்றும் ஊன்றுகோலாக இரு, மகனே!'' என்று வாழ்த்தினார்.

மேரி மகனைப் பற்றிய சிந்தனையில் மூழ்கியவாறு மாதா கோவிலைவிட்டு வெளியே வந்தாள். அவன் ஊருக்கு வந்து எட்டு வருடங்கள் ஆகிவிட்டன. எப்பொழுதாவது பணமோ, கடிதமோ அனுப்புவான். அவனுக்கு ஒரு படித்த நாகரிகமான மனைவியும் இரண்டு குழந்தைகளும் இருக்கிறார்கள் என்று கேள்வி. மேரிக்குத் தன் பேரக் குழந்தைகளைக் கொஞ்சிச் சீராட்டி மகிழ வேண்டும் என்று ஆசைதான். ஆனால் அவர்கள் இந்த ஊருக்கு வந்தால்தானே? குழந்தைகள் கான்வென்டில் படிக்கிறார்கள் என்று அவளுக்குத் தெரிந்திருந்தது. எத்தனை கிறிஸ்துமஸ் பண்டிகையைத் தனியாகவே கொண்டாடி விட்டாள் மேரி. இந்த வருஷம் பிள்ளையும், பேரப் பிள்ளைகளும் வந்தால் எத்தனை நன்றாக இருக்கும்? கணவரிடம் பிள்ளைக்குக் கடிதம் எழுதச் சொல்லியிருந்தாள். அவர் எழுதினாரோ என்னவோ?

வீட்டுக்கு வந்ததும் அவள் கணவனிடம் கேட்ட முதல் கேள்வி: ''ஜோனிக்குப் பண்டிகைக்கு வரச் சொல்லிக் கடிதம் எழுதினீர்களா?'' என்பதுதான். முற்றத்தில் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தவாறு வெயில் காய்ந்து கொண்டிருந்த ஜார்ஜ் கையில் குவளையிலிருந்த தவிடு, நொய் முதலியவை கலந்த உணவைக் கோழிகளுக்காகக் கொஞ்சம் கொஞ்சமாக முற்றத்தில் போட்டு, அவைகள் சாப்பிடும் அழகைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான். ''கொக்கரக்கோ'' என்று குரல் எழுப்பிக் கொண்டே வெள்ளை, கறுப்பு, பழுப்பு நிறக் கோழிகளும், சேவல்களும், 'கீ....கீ' என்று பஞ்சு உருண்டை போன்ற பளபளக்கும் கண்களுடைய கோழிக் குஞ்சுகளும் அவன் கட்டிலைச் சுற்றி வளைய வந்து, அவன் இடும் உணவைக் கொத்தித் தின்று கொண்டிருந்தன. கூடையைக் கீழே வைத்து விட்டு மேரி ஒரு முறை கணவனை முறைத்துப் பார்த்தாள். ''நான் கேட்கிறேன். பதிலே காணுமே?'' என்றாள் உரத்த குரலில்.

நிமிர்ந்து பார்த்த ஜார்ஜ், ''என்ன பதில் வேண்டும் உனக்கு? எப்பவும் போல் இந்த வருஷமும், உன் பிள்ளைக்குக் கடிதம் அனுப்பியிருந்தேன், அவனும் வர முடியாது. இந்தப் பண்டிகைக்குக் குழந்தைகளுடன் பங்களூருக்குத் தன் மனைவியின்


'தரத்தை
விரும்புவோர்
அணிகின்றனர்

## கற்றுக்குட்டி !




மாமா வீட்டுக்குப் போகிறேன் என்று எழுதி விட்டான்'' என்றான் அலட்சியமாக. மேரியின் கண்களில் நீர் நிறைந்தது.

''நீ வந்துதானாக வேண்டும். இது உன் அம்மாவின் விருப்பம் என்று எழுதுங்களேன்'' என்றாள் மேரி.

''இதோ, பாரு, மேரி. உனக்கு என்ன சொன்னாலும் தெரிய மாட்டேன் என்கிறது. உன் பிள்ளைக்கும் மருமகளுக்கும் இந்தப் பட்டிக்காட்டு ஊரும் உணவும் பிடிக்காது.''

''அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள். என் கையால் செய்த கேக்கு என்றால் அவன் விரும்பிச் சாப்பிடுவான். ஏன், இருட்டுத்தனமாகக்கூட அந்த நாளில் எடுத்துத் தின்றிருக்கிறான். நீங்கள் மறுபடியும் வற்புறுத்தி எழுதுங்கள். அவன் வராமல் இருந்து விட மாட்டான். எனக்குப் பிள்ளையைப் பார்க்க வேண்டும் என்று அடித்துக் கொள்கிறது. கடிதத்தைத் தபால் பெட்டியில் போட்டுவிட்டு, கடைத் தெருவுக்குப் போய், சர்க்கரை, கோதுமை மாவு, திராட்சைப் பழம், முந்திரிப் பருப்பு குழந்தைகளுக்குப் பலூன்கள் வாங்கி வாருங்கள். பலூனைப் பல நிறங்களாகப் பார்த்து வாங்குங்கள். அப்பொழுதுதான் குழந்தைகளுக்குப் பிடிக்கும். பிஸ்கட்டு, 'டீ' எல்லாம் வேண்டும். இன்னும் மெழுகுவத்திகள் கலர் காகிதங்கள் வாங்க வேணும்'' என்றாள்.

முடிவில் தன் சுருக்குப் பையிலிருந்து முப்பது ரூபாயை மூன்று பத்து ரூபாய் நோட்டுக்களாகக் கசங்கியிருந்ததை எடுத்துக் கொடுத்தாள்.

''ஆமாம். போன வாரம் நம் வீட்டுத் தோட்டத்தைச் சுற்றி வேலி போட வேண்டும். மூங்கில் வாங்கப் பணம் இருக்கிறதா என்று கேட்டேனே, அப்போ காலணாக்கூட இல்லை என்றாயே; இப்பொழுது இந்தப் பணம் எப்படி வந்து குதிக்கிறது?'' என்று வியப்புடன் கேட்டான் ஜார்ஜ்.

''இதெல்லாம் என்ன குறுக்குக் கேள்வி: இந்தப் பணம் ஒரு வருஷமாக முட்டை விற்றும், பால் விற்றும், செலவு போக மீதியைச் சேர்த்து வைத்தது; பண்டிகைக்கு என்று நான் சேர்த்து வைக்காவிட்டால் இப்பொழுது எப்படிச் சமாளிப்பீர்கள்? இந்தத் தடவை பிள்ளை வருவான் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது'' என்றாள் மேரி. இனி ஜார்ஜ் வேறு வழியின்றி அவள் விருப்பத்தை நிறைவேற்றச் சென்றான்.

விடிந்தால் பண்டிகை. ஊரெல்லாம் பண்டிகை கொண்டாடுவதற்கான முன்னீடுகளில் மூழ்கி யிருந்தார்கள். மேரி வீட்டின் முன் அறையைப் பெருக்கிச் சுத்தம் செய்து விட்டு வர்ணக் காகிதமும், பல நிறப் பலூன்களையும், பொம்மைகளையும் எடுத்து வந்து ஜார்ஜிடம் கொடுத்து, ''இந்த அறைக்கு நடுவே அழகாகக் 'கிறிஸ்துமஸ் மரம்' செய்துவிட்டுப் பரிசுப் பொருள்களைக் கட்டித் தொங்கவிடுங்கள்!'' என்று உத்தர விட்டாள். ஏதுவும் பேசத் தோன்றாமல் கத்தரிக்கோலும் கையுமாக வேலையில் மூழ்கினான் ஜார்ஜ். மேரி சமையற்கட்டில் மணம் கமழும் கேக்கு செய்வதில் மூழ்கினாள். ஒரு மணி நேர வேலைக்குப் பிறகு மேரி வந்து, ''இதோ பாருங்கள்! பணியாரம் வெகு நன்றாக அமைந்து விட்டது. எல்லாம் ஜோனியின் அதிர்ஷ்டம்தான்'' என்றாள் மகிழ்ச்சியுடன். இப்படி மகனை எதிர்பார்க்கிறாளே, அவன் வராவிட்டால் அந்த ஏமாற்றத்தை இவள் எப்படித் தாங்குவாள் என்று கவலைப் பட்டான் ஜார்ஜ். ''மேரி, பலகாரம் எல்லாம் செய்து பண்டிகையை வரவேற்கத் தயாராகி விட்டாய். ஒரு வேளை ஜோனி வர முடியாவிட்டாலும் நீ கவலைப்படாமல் இருக்க வேண்டும். பணியாரத்தை நாம் சாப்பிட்டு விடலாம்'' என்றான் ஜார்ஜ்.

மேரிக்குக் கோபம் வந்து விட்டது. ''போதுமே உங்கள் பேச்சு. உங்கள் துக்கிரி வாயை வைத்துக் கொண்டு பேசாமல் இருங்கள். ஜோனி கண்டிப்பாக வருவான். உங்களுக்கு ஏன்தான் இப்படி யெல்லாம் எண்ணத் தோன்றுகிறதோ? கர்த்தர் என்னைக் கைவிட மாட்டார். என் பிள்ளை வந்தே தீருவான்'' என்றாள் அழுத்தமாக. பிறகு இருவரும் சற்று நேரம் ஏதுவும் பேசவில்லை. மௌனமாக யோசனையில் ஆழ்ந்திருந்தனர். கணகணவென்று வாசலில் சைக்கிள் மணி அடித்ததும் இருவரும் பதறிக்கொண்டு வெளியே வந்தார்கள். ''தந்தி'' என்றான் தந்திச் சேவகன். தந்தியைப் படித்துவிட்டு, ''ஒன்றுமில்லை. ஜோனி வரவில்லையாம். பங்களூருக்குப் போகிறானாம்'' என்றான் ஜார்ஜ் உடைந்த குரலில்.

மேரிக்கு ஒன்றுமே தோன்றவில்லை. ''பரம பிதாவே! ஏகநாதரே! நான் உன்னை வேண்டிக்கொண்டதெல்லாம் வீண்தானா? நான் மகா பாவி. எனக்கு அதிர்ஷ்டமே இல்லை'' என்று புலம்பி அழுதாள்.

''எதற்காக இந்த அழுகை? நான்தான் அப்பவே ஜோனி வருவது சந்தேகம் என்றேனே. நீயாக உன்னுள் ஆசையையும் நம்பிக்கையையும் வளர்த்துக் கொண்டு பிறகு இப்படி வருந்துவதால் அர்த்தமே இல்லை.'' அவளைத் தேற்ற அவனும் முடியவில்லை. அவன் மகனை வரவேற்க அத்தனை ஆசையுடனிருந்தாள். அந்த உடைந்த உள்ளத்துக்கு நிம்மதி அளிக்க என்ன செய்யலாம் என்று யோசித்தபடி வீட்டிலிருக்கப் பிடிக்காமல் மாதா கோவிலை நோக்கி நடந்தான்.

பொழுது ஓடிக் கொண்டே யிருந்தது. மேரி அழுதழுது கண்ணீர் வற்றிவிட்டது.

வாசலில் மெதுவான பேச்சுக் குரலிடைக் கணவனின் குரலைக் கேட்டு மேரி வெளியே வந்தாள். அந்த இருட்டில் இரண்டு குழந்தைகளைப் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்த ஜார்ஜைப் பார்த்து விழித்தாள் மேரி.

''மேரி! பண்டிகை கொண்டாடக் குழந்தைகள் இல்லை என்று கவலைப்பட்டாயே, இதோ இவர்களை அழைத்து வந்திருக்கிறேன். இவர்கள் சவப் பெட்டி செய்யும் நமது அந்தோணியின் குழந்தைகள். போன மாதம் இவர்கள் தாய் இறந்து விட்டாள். நான் மாதா கோவிலுக்குப் போய்ப் பாதிரியாரிடம் உன் கவலையைச் சொல்லி முறையிட்டேன். அவர்தான் 'அந்தோணிக்கு உடம்பு சரியில்லை. அவனும் பண்டிகை கொண்டாட முடியாது. அவன் குழந்தைகளை அழைத்துப் போய் உன் வீட்டில் அவர்களுடன் பண்டிகையைக் கொண்டாடு; குழந்தைகளுக்கும் பண்டிகை இல்லாமல் போகாது; மேரிக்கும் மனநிம்மதியாக இருக்கும். தான் பெற்ற குழந்தை மட்டும்தான் குழந்தையா? எல்லாக் குழந்தைகளும் நமதுதான் என்று நினைக்க வேண்டும்' என்றார். அதன்படி இவர்களை அழைத்து வந்தேன்'' என்றான்.

குழந்தைகள் இரண்டும் ''பாட்டி! எனக்கு நீங்கள் பணியாரமெல்லாம் தருவீங்க என்று தாத்தா சொன்னார். இந்தக் கிறிஸ்துமஸ் மரம் எத்தனை அழகாக இருக்கு! நானும் பலூனைக் கட்டுகிறேன் பாட்டி'' என்று மேரியைக் கட்டிக் கொண்டார்கள். அவர்கள் அணைப்பில் மேரி ஓர் உண்மையை உணர்ந்தாள்.: 'தான் பெற்றது மட்டுமல்ல குழந்தை. தாய் என்பவள் எல்லாக் குழந்தைகளையும் தன் குழந்தைகளாகப் பாவிக்க வேண்டும்' என்ற உண்மை அது.

''வாங்கடா, என் செல்வங்களா! உங்களுக்குத்தான் இவையெல்லாம்!'' என்றான்.

இரு குழந்தைகளும் விளையாட்டும், சிரிப்புமாக, மேரியைப் 'பாட்டி, பாட்டி' என்று சுற்றிச் சுற்றி வந்தன. அந்த வீட்டிலிருந்து இப்போது சிரிப்பும் கும்மாளமும் கேட்டுக் கொண்டிருந்தன. தன் பொக்கை வாயால் குழந்தைகளுடன் சேர்ந்து மேரி பலூன் ஊதிக் கும்மாளமிடுவதைப் பார்த்துத் தனக்குள் சிரித்துக் கொண்டான் ஜார்ஜ். மேரி எத்தனையோ வற்புறுத்திய பிறகு இரு குழந்தைகளும் படுக்கைக்குப் போனார்கள். மேரியும் சற்றுக் கண்ணயர்ந்தாள்.

'தடதட'வென்று கதவு தட்டப்படும் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக் கதவைத் திறந்தாள் மேரி. மழை இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது. பெட்டியும், படுக்கையுமாகப் பிள்ளை, மனைவி மக்களுடன் ஜோணி நிற்பதைப் பார்த்து வியப்பில் வாயடைத்துப் போனாள் கிழவி.

''என்னம்மா அப்படிப் பார்க்கிறாய்? வர மாட்டேன் என்ற என் தந்தி கிடைத்திருக்குமே. நாங்கள் பங்களூருக்குப் போக ரயில் ஏறினோம். திடீரென்று மழை பிடித்துக் கொண்டு விட்டது. பாதி வழியில் தண்டவாளம் மழைத் தண்ணீரில் மூழ்கி விட்டது. பொழுது விடிந்துதான் ரயில் கிளம்பும்



'' என்ன மாமா ! உங்க வீடு பார்க்க நன்றாயில்லையே ! எங்கப்பா கட்டியிருக்கிற வீடு ஜோராயிருக்கு!''

'' என்ன பண்றது. உங்கப்பா மாதிரி எல்லோரும் பெரிய கடன்காரனாக இருக்க முடியுமா ?''

என்று சொல்லி விட்டார்கள். பொழுது விடிந்தால் பண்டிகை ஆயிற்றே. நடு வழியில் என்ன செய்வது என்று தவித்துப் போனேனும். கடையில் ஒரு லாரி நம் ஊர் பக்கம் வருவதாகத் தெரிந்தது. சரி, கர்த்தரின் திருவுளம் பண்டிகையை இங்கு நடத்த வேண்டும் என்பதுதான் என்ற எண்ணத்துடன் லாரிக்காரரிடம் கெஞ்சிக் கூத்தாடி வந்து சேர்ந்தோம்'' என்றான் ஜோணி ஒரே மூச்சில்.

''அத்தை வணக்கம்!'' என்று வணங்கிய மருமகளின் குரலோ, ''இதுதான் பாட்டியா அப்பா? நல்ல பாட்டி. நிறைய பலூன் எல்லாம் நமக்கு வச்சிருக்காங்க!'' என்ற பேரக் குழந்தைகளின் பேச்சோ அவள் காதில் விழவேயில்லை. அவள் உள்ளம் கர்த்தரின் கருணையை நினைத்து வியந்தது.

''அம்மா, பசிக்கிறது. உன் கையால் கேக்கும் செய்திருப்பாயே. முதலில் கொடு'' என்று சுவாதீனமாகக் கட்டிலில் உட்கார்ந்தான் ஜோணி. தரையில் படுத்துறங்கும் அந்தோணியின் குழந்தைகளைப் பார்த்து விட்டு ''யாரம்மா இந்தக் குழந்தைகள்?'' என்றாள் மருமகள். ''உன் மாமியாருக்கு இந்த ஊர்க் குழந்தைகள் எல்லாமே குழந்தைகள்தான்'' என்றான் ஜார்ஜ்.

மேரி கர்த்தரின் படத்தருகே மண்டியிட்டு, ''கர்த்தரே! எனக்காக, என்னிடம் என் பிள்ளையைப் பார்த்துக் கொண்டு வந்து சேர்ப்பதற்காக நீ ரயில் வண்டியையே மழை என்ற காரணத்தால் நிறுத்திவிட்டாய்! என்னே உன் கருணை! ஆனால் இனிமேல் நான் உனக்கு அப்படியெல்லாம் தொந்தரவு கொடுக்க மாட்டேன். எல்லாக் குழந்தைகளும் என் குழந்தைகள் என்ற பக்குவ நிலைக்கு வந்து விட்டேன்'' என்று மனமுருகக் கண்ணீர் வழிய வேண்டினாள். வெளியே பொழுது புலர்வதற்கு அறிகுறியாகக் 'கொக்கரக்கோ' என்று சேவல் கூவியது. தூரத்தே மாதா கோவிலிலிருந்து பிரார்த்தனை மணி ஓசையும் கேட்டது.

காலம் பறக்கிறது...ஆயினும் அவள் எழில் நிலைக்கிறது



கண்டான். கண்டதும்
மையல் கொண்டான். அவளு
டைய பேரெழில் அவனை மயக்கிற்று.
காதல் கடிமணம் நடந்தது. ஆண்டுகள்
இருபது ஆகிவிட்டன. ஆனாலென்ன? அன்று
முதல் தடவையாக அவளைக் கண்ட காட்சி அவன்
நினைவில் பசுமையாக நிலைத்துவிட்டது. அவள்
எழிலோ இன்னும் ஒளி குன்றாது சுடர் விடுகிறது. தன்
நாயகன் போற்றும் தனது அழகுப் பராமரிப்புக்கு
அவள் உபயோகிப்பது "'ஹேஸலின்' ஸ்னோ"...
தனியாகவோ, பவுடர் படியும் தளமாகவோ எழிலுக்கு
மெருகூட்டிப் பாதுகாக்கிறது "'ஹேஸலின்' ஸ்னோ".

# 'ஹேஸலின்' ஸ்னோ

உங்களுக்கு எழிலூட்டுகிறது.

'ஹேஸலின்' வரிசையில் மேலும் கிடைப்பவை கோல்ட் கிரீம், டால்கம்



பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி
(இந்தியா) ப்ரைவேட் லிட்.
த. பெ. நெ. 290, பம்பாய்-1






### முப்பத்திமூன்றும் அத்தியாயம்

## ஒருநாள் கூத்து

காஞ்சியிலிருந்து திருமுனைப்பாடி நாட்டின் தலைநகரான சேந்தமங்கலத்துக்குக் கயல்விழியும் பைந்தமிழ்க் குமரனும் ஆதிச்சதேவருடன் திரும்பி வந்தார்கள். அதன் பின்னர் நடந்த நிகழ்ச்சிகள் யாவும் கூத்தரங்கில் வெகு வேகமாக ஒன்றன்பின் ஒன்றாக மாறி வரும் நிகழ்ச்சிகள் போலவே கயல்விழிக்குத் தோன்றின. அவளைப் பொறுத்த மட்டில் பைந்தமிழ்க் குமரன் பல்வேறு ரகசியங்கள் நிறைந்த ஒரு மாய மனிதன். அவளால் முழுதும் புரிந்து கொள்ள முடியாதவன்.

புரிந்துகொள்ள முடியாதவனாக இருந்தால் என்ன? அவளிடம் அவன் அன்பு கொண்டிருந்தான். அவளுக்குப் பாதுகாப்பு அளித்தான். அவளிடம் உதவிகள் கோரினான். அவளுக்கும் உதவிகள் செய்தான். சொல்லக் கூடிய ரகசியங்களை மட்டும் சொல்லி வைத்தான். இவை போதுமே கயல்விழிக்கு!

கோசல நாட்டின் படை பலம், அவர்களது பகைவர்களின் படைபலம், போர் நிகழ்ந்து முடியக் கூடிய கால அளவு இவ்வளவையும் கயல்விழி பைந்தமிழ்க் குமரனிடம் கூறி விட்டாள். பாமினியிடமிருந்தும் மற்றப் பெண்டிரிடமிருந்தும் கதை கேட்டு அவள் சேகரித்த செய்திகள் அவை. பைந்தமிழ்க் குமரனோ கோசல நாட்டுக்குச் சென்றிருந்த சோழ சாம்ராஜ்யத்துப் படையினரைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டிருந்தான்.

செய்திகள் யாவும் கயல்விழிக்கும் தெரியாதவாறு திருமுனைப்பாடி நாட்டுக் கோப்பெருஞ் சிங்கத்திடம் சேர்ப்பிக்கப் பெற்றன. சேந்தமங்கலத்து மாளிகையில் தனித்திருந்த கயல்விழி சில தினங்கள் பைந்தமிழ்க் குமரனைக் காண முடியாமல் தனியாய்த் தவித்தாள். ஆதிச்சதேவரையும் அச்சம் பற்றிக் கொண்டு விட்டது. மூன்று தினங்களாக அவன் திரும்பி வரவில்லை.

நான்காம் நாள் இரவில் நடுச் சாமத்தில் வந்து மாளிகையின் கதவைத் தட்டினான் பைந்தமிழ்க் குமரன். வெளியில் புரவிகள் பூட்டிய இரு ரதங்கள் நின்று கொண்டிருந்தன. தந்தையையும் மகளையும் ஒரு ரதத்தில் ஏறிக் கொள்ளச் செய்து விட்டு, தான் மட்டும் தனி ரதமொன்றில் ஏறிக் கொண்டான்.

ரதங்கள் பறந்தன. பறந்துகொண்டே இருந்தன. குறுக்கு வழிகளிலும் சுற்று வழிகளிலும் இரவும் பகலும் அவை பறந்தன. மதுரைத் திருநகரின் ஆலவாய் அண்ணல் நெடுங்கோபுரங்களைக் கண்டவுடன்தான் கயல்விழிக்கு உண்மை புலப்பட்டது. வழியில் பாழ் அடைந்த மண்டபங்களின் ஓரங்களில் ரதங்களை நிறுத்தி விட்டு அவர்கள் உண்டு களைப்பாறிய சமயங்களிலும் கயல்விழியால் பைந்தமிழ்க் குமரனிடம் ஏதும் பேச முடியவில்லை.

அவன் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். அதை அவள் உணர்ந்து கொண்டாள். மிகப் பெரிய புயல் வீசப் போவதற்கு முன்பு அமைதி நிலவுமல்லவா? அத்தகைய பயங்கரமான அமைதியை அவன் முகத்தில் கண்டாள் கயல்விழி. அதை அவள் கலைக்கத் துணியவில்லை.

மதுரைமாநகரத்தின் எல்லையில் ஒரு மாளிகைக்கு முன்பு அவர்களுடைய ரதங்கள் நிறுத்தப்பட்டன. அதற்குப் பிறகு என்ன நடைபெற்றதென்றே கயல்விழியால் நிதானிக்க முடிய

வில்லை. அவனுடைய கலைக் குழுவைச் சேர்ந்த பெண்கள் அனைவரும் ஓடி வந்து அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார்கள். ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார்கள். பின்னால் திரும்பிப் பார்த்த போது, புலவர் படை பைந்தமிழ்க் குமரனைத் தூக்கித் தோளின் மீது வைத்துக் கொண்டு ஆனந்தக் கூத்தாடியது. ஒரே அன்பு வெள்ளம்; ஆனந்தப் புயல்; குதூகலக் களியாட்டம்.

மறு நாள் முற்பகலில் மதுரைமா நகரத்தின் தெருக்கள்தோறும் குதிரைகளின் மீது வைத்துக் கட்டிய கலை முரசங்கள் அதிர்ந்தன. கலைக் குழுவைச் சார்ந்தவர்கள் புது வகையான ஆடைகளையெல்லாம் அணிந்து கொண்டு தெருச் சதுக்கம்தோறும் முரசொலி எழுப்பினார்கள்.

''மதுரைப் பெருமக்களே! நமது நகரத்தையும் நம்மையும் அழிவிலிருந்து காப்பாற்றி, நகரத்தையும் நம்மையும் ஒன்றாக உருவாக்கிய புலவர் பெருமகன் நம்மைக் காணுவதற்காக மதுரை மாநகருக்கு எழுந்தருளியிருக்கிறார்... நாம் யாரைக் காண வேண்டும், யாருடைய சொல்லைக் கேட்க வேண்டும், யாருடைய சொல்லைச் செயலாக்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தோமோ அவர் இன்று நம்மைத் தேடி வந்திருக்கிறார்....''



"எப்போது வந்தார்? எங்கே இருக்கிறார்?" என்று கேட்டுக் கொண்டே சந்திக்குச் சந்தி, சதுக்கத்துக்குச் சதுக்கம் திரள் திரளாக மக்கள் கூட்டம் கூடியது.

"அவர் இன்று மாலையிலேயே உங்கள் முன் தோன்றப் போகிறார்! சோழ சாம்ராஜ்யம் அவரைக் கண்ட இடத்தில் விலங்கிட்டுச் சிறை செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறதல்லவா? அந்தக் கட்டளையைச் சிதற அடிப்பதற்காக அவர் வந்திருக்கிறார். பாண்டிய நாடும் அடிமைச் சிறையில், அடிமைத் தளையில் கட்டுண்டிருக்கிறதல்லவா? அந்தச் சிறைத் தளையையும் தூள் தூளாக நொறுக்கித் தள்ளுவதற்கு வந்திருக்கிறார். பாண்டிய நாட்டுக்குத் தலைவர் இனி குலசேகரபாண்டியர் ஒருவர்தாம்! அவரே நம் தந்தை என்பதை அவருக்கே எடுத்துரைக்க நம் புலவர் வந்திருக்கிறார்."

கோயிலை அடுத்த பட்டி மண்டபத்தில் தினந்தோறும் வள்ளுவரின் பொருளதிகாரம் பற்றிப் புலவன் உரை நிகழ்த்துவான் என்பதையும் அதை அடுத்துக் கயல்விழியின் 'வெற்றித் திருமகள்' என்ற கூத்து நடைபெறும் என்பதையும் அறிவித்தார்கள் முரசறைவோர்.

காட்டுத் தீ போல் நகரத்துக்குள் செய்தி பரவியது. மக்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் போதெல்லாம் இதையே பேசினார்கள். கூனிக் குறுகி நடந்தவரெல்லாம் தலை நிமிர்ந்து ஏறு நடை போட்டனர். கண்களுக்குப் புத்தொளி கிடைத்ததுபோல், நெஞ்சுக்குள் புத்துணர்வு பூத்தது போல், இரத்தக் குழாய்களில் புது ரத்தம் பாய்ந்தது போல் இருந்தது, மதுரைமா நகரத்து மக்களுக்கு. இவ்வளவுக்கும் பலர் இவனை நேரில்கூடப் பார்த்ததில்லை. அப்படி அவனிடம் என்னதான் சக்தி இருந்தது? மதுரை நகருக்குள் அவன் நுழைவதற்கு முன்பே அவனுடைய உள்ளொளி எங்ஙனம் அந்த நகரம் முழுவதும் பரவியது? – அவன் தலைவன்!

அவனது சக்தி பரவுவதற்குக் காரணமாக இருந்து எல்லா ஏற்பாடுகளையும் மறைமுகமாக இயக்கிய விழுப்பரையர், ஏதுமறியாதவர் போல் தனியே நகரத்தைச் சுற்றி வந்து கொண்டிருந்தார். அவருடைய குதிரை நிதானமாக நடைபோட்டுப் பழகியது. மக்களின் முகங்களே அவருடைய அளவுகோல். முகத்திலிருந்து அகத்தை ஊடுருவி வந்தார் அவர்.

குலசேகர பாண்டியர் அப்போது மதுரையில் இல்லை. பழமுதிர் சோலைக்குச் சென்று சில தினங்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். உடல்நிலை தளர்ச்சி கண்டிருந்தது அவருக்கு. உடல் நிலைத் தளர்ச்சிக்குக் காரணம் மன நிலைதான். ஏனோ இப்போதெல்லாம் மீண்டும் மீண்டும் அவருக்குச் சுந்தரபாண்டியனின் நினைவு வந்தது. சோழ சாம்ராஜ்யத்தின் தலைமைக்கு இராஜ இராஜன் வந்த பிறகு அவனுடைய செருக்கான ஆணைகள் அவரை உருக் குலைத்து விட்டன. அமைச்சர் சயங்கொண்ட சோழவல்லபர் அமைச்சராகவே நடந்து கொள்ளவில்லை. அரசரின் மேலதிகாரி என்ற முறையில் ஒவ்வொன்றையும் தமது போக்கில் செய்து கொண்டுவந்தார். ஆகவே, சிந்திப்பதற்காக ஓய்வுதேடி அழகர்கோயில் மாளிகையில் தங்கியிருந்தார் பெரிய பாண்டியர்.

பிற்பகலில் மதுரை மாநகரம் முழுவதுமே ஒன்றாய்த் திரண்டு பட்டிமண்டபத்தின் முன்பு கூடி விட்டது போல் தோன்றியது. புலவர் படையைச் சேர்ந்தவர்கள் மக்களின் பெருங் கூட்டத்தைக் கண்டு திகைத்துப்போனார்கள். ஒவ்வொரு தினமும் கூட்டம் நடைபெறுமென்றும் ஒவ்வொரு தெருவினராக வந்து கண்டு செல்லலாமென்றும் கூறினார்கள். புலவனின் குரல் அனைவரின் செவிகளிலும் விழாது; தொலைவில் இருப்பவர்கள் அவனைக் காணவும் முடியாது; கூட்டத்தில் குழந்தைகளுக்கும் பெண்மணிகளுக்கும் துன்பம் நேரலாம் — எல்லாவற்றையும் விரைவாக எடுத்துரைத்தார்கள்.

"அவரை ஒரே ஒருகணம் கண்டு விட்டால் போதும். இன்றே, இப்போதே காண வேண்டும். கட்டுப்பாட்டுடன் நடந்து கொள்ளுகிறோம்" என்று உறுதி அளித்தது கூட்டம். தங்களுக்குள் ஒழுங்குமுறைகளைச் சிறு சிறு தலைவர்களின் வாயிலாக அது வகுத்துக் கொண்டு விட்டது.

பைந்தமிழ்க் குமரன் மண்டபத்தில் தோன்றினான். முகத்தில் இளம் தாடி மண்டிக் கிடந்தது. தலை முடியைச் சுற்றிக் கட்டியிருந்தான். அவன் குரல் கணீரென்று எழுந்தது. அவன் குரலைக் கேட்க முடிந்தவர்கள், கேட்க முடியாதவர்கள், அவனைக் காண முடிந்தவர்கள், காண முடியாதவர்கள் அனைவருமே மந்திரத்தால் கட்டுண்டு விட்டவர்கள் போல் மெய்ம்மறந்து அமர்ந்து விட்டனர். அமைதியாக அங்கே மக்கட் பெருங்கடல் கரை கடவாமல் அலைமோதியது.

"நான் பெற்ற சிற்றறிவு, என் உடல், பொருள் ஆவி, — இவ்வளவும்



# புதிய மர்பி மாடல் நான்கு விசேஷ அம்சங்கள் கொண்டது

- நவீன ஒப்பனைக்குப் பொருந்திய, மிடுக்காக அமைக்கப்பட்ட தாழ்ந்த மரப்பெட்டி
- பளிச்சிடும் பிடிகளுடன் கண்ணைக்கவரும் அழகிய முகப்புப் பலகை
- நவீன மோஸ்தர் சுருதி அமைப்புக் (ட்யூனிங்) குறிப்பு
- மிகவும் இயற்கையான ஒலி மீட்டலுக்கேற்ற நுட்பமான, முட்டைவடிவான ஒலிபெருக்கி.



**மாடல் டிஏ 0922 ஏஸி**
**மாடல் டியு 0922 ஏஸி/டிஸி**
6-வால்வ் • 3-பாண்ட்
தொடர்ச்சியான ஒலிக்கட்டுப்பாடு.
நூதன பியானோ-கீ ஸ்விட்ச்
முட்டைவடிவான ஒலிபெருக்கி.
கிராமபோன் பிக்-அப்
பொருத்தங்கள் (சாக்கெட்டுகள்)
வெளிப்புற ஒலிபெருக்கிப்
பொருத்தங்கள்.

**murphy radio**

மர்பி ரேடியோ
இல்லத்தை மகிழ்விக்கிறது!

# உங்கள் கேசம் உதிருகிறதா?



**பொடுகு**

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.

**இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.**





**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹேயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1



**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.



# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/64

எனக்கு இந்த நாடு வழங்கியிருக்கிறது. நீங்கள் வழங்கியிருக்கிறீர்கள். அவற்றை இப்போது உங்களுக்கே திருப்பித் தந்து நன்றிக் கடன் கட்ட வந்திருக்கிறேன். என்னை நான் உங்களுக்குத் தருகிறேன். ஒவ்வொருவரும் உங்களது தூய அன்பை எனக்குத் தாருங்கள். இந்த நாட்டுக்காகத் தாருங்கள். நாடு என்பது என்ன? நீங்கள், நீங்கள், நீங்களேதான் நாடு! குடி மக்கள்தான் நாடு! உங்கள் குடும்பத்தின் தலைவர் குலசேகர பாண்டியர்!''

வள்ளுவர் அவனுக்குக் கொடுத்த குறையாப் பெருஞ் செல்வத்தை அவன் மக்கள் மனத்தில் எளிதில் தைக்கும்படியாக வாரி வாரி வழங்கினான். தேனில் குழைத்த சொல்லம்புகளைக் கேட்போர் நெஞ்சில் தைக்கும்படியாகத் தொடுத்து விட்டான். உண்மையைக் கூறினான்; நன்மையைக் கூறினான். அஞ்சாமல் கூறினான்.

கூட்டம் திரைச் சீலைச் சித்திரமாக மாறி விட்டது. அவனுடைய குரலைக் கேட்க முடியாத தொலைவில் இருந்தவர்கள்கூட, தங்கள் உள்ளத்திலிருந்து அவன் குரல் எழும்பி வருவதை உணர்ந்தார்கள். அவன் ஓர் அறநெறியாளன் என்பதையும் அஞ்சாநெஞ்சன் என்பதையும் அவர்களால் கண்டு கொள்ள முடிந்தது.

அடுத்தாற் போல் கயல்விழியின் நடனம் நடைபெற்றது. நடனம்தானா அது? அவள் தீக்கொழுந்தாகவே மாறிச் சுடர் சூழ விட்டுச் சுழன்றாள். அன்றொரு நாள் மதுரைமாநகரை அழிக்கத் துணிந்தாளே அந்தக் கண்ணகியல்ல இவள். மதுரை மாநகருக்குப் புதிய ஒளி கொடுப்பதற்கு முன் வந்த கொற்றவைத் தேவி!

'அரசியல் பிழைத்தார்க்கு அறம் கூற்றாகும்!' என்பதை அன்று அந்தக் கண்ணகி மதுரைமாநகரில் நிலைநாட்டினாள். இன்று இவளோ அதையே கூறி, அரசியலில் பிழை செய்து கொண்டிருந்த சோழ சாம்ராஜ்யத்தின் கூற்றாகக் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தாள். ஒவ்வொருவர் உள்ளத்திலும் சுடர் ஏற்றினாள்.

நிகழ்ச்சிகள் முடிந்தன. மதுரைமாநகரத்து மக்கள் மூச்சு விடவும் மறந்து போனார்கள்.

நகரத்தின் எல்லையிலிருந்த மாளிகைக்குப் பைந்தமிழ்க் குமரனும் மற்றவர்களும் திரும்பிச் சென்ற போது, அங்கே கனல் தெறிக்கும் விழிகளோடும் தம்முடைய வீரர்களோடும் காத்திருந்தார் ஜெயங்கொண்ட சோழ வல்லபர். குதிரையிலிருந்து அவன் குதித்து இறங்கியவுடன் தாமே அவன் கரங்களை விலங்கிட்டுப் பிணைத்தார்.

## முப்பத்திநான்காம் அத்தியாயம்

# அநீதியின் ஆணை

விலங்கிட்டுக் கரங்களைப் பிணைப்பதற்கு உதவி செய்வதே போல் கரங்களை அமைச்சரிடம் நீட்டியவாறு புன்னகை செய்தான் பைந்தமிழ்க் குமரன். அவனுடைய அந்தச் சிரிப்பு ஏனோ அமைச்சரை நடுங்கச் செய்தது. ''எதிர்பார்த்ததைத்தான் எதிர்பார்த்தபடி செய்திருக்கிறீர்கள். வேறொன்றும் செய்யவில்லை'' என்று அமைதியோடு கூறினான் அவன்.

அவர் துணுக்குற்றார். பைந்தமிழ்க் குமரன் சுற்றிலும் கண்ணோட்டம் விட்டான். கூர்வேல் தாங்கிய குதிரை வீரர்கள் நூறு பேர்களுக்கு மேல் அங்கிருந்தார்கள். அனைவருமே சோழ நாட்டு வீரர்கள்.

கயல்விழி அருகில்தான் பிரமை பிடித்துப் போய் நின்றாள். அவனைச் சார்ந்த புலவர்கள் சிலர் துரிதமாக எங்கோ விரைந்து செல்வது தெரிந்தது.

''ஏன், கயல்விழியையும் சிறை செய்யலாமே! அவளும் அருகில்தான் இருக்கிறாள்'' என்றான் புலவன்.

''பெண்களின் குற்றங்களை மன்னித்து விடும் பெருந்தன்மை சோழ நாட்டுக்கு உண்டு. ஆட்டி வைப்பவன் நீ. ஆடுகிறவள் அவள். இனி எல்லாமே ஒடுங்கி விடும்!'' என்றார் அமைச்சர்.

அவன் உரக்கச் சிரித்தான்: சிரித்துக் கொண்டே அவர் சிந்தனையில் இருப்பதை அறிந்து கொள்ளத் துடித்தான். இரவோடு இரவாக அவர் அவனைக் கங்காபுரிக்கு அனுப்பி வைக்கத் திட்டமிட்டிருக்கிறார். பாண்டியர் மதுரைக்குத் திரும்புவதற்கு முன்பாக, மக்களிடம் செய்தி பரவுவதற்கு முன்பாக, அவர் அவனை மதுரையை விட்டுக் கடத்தி விடுவதற்குத் துணிந்திருக்கிறார்.

"கங்காபுரிக்குத் தானே என்னை அனுப்புகிறீர்கள்?" என்று கேட்டான் புலவன்.

"எங்கு அனுப்புகிறேன் என்பதை உன்னிடம் கூற வேண்டும் என்பதில்லையே?"

"தாங்கள் கூற வேண்டாம். ஆனால் இதை முன்னரே நான் தெரிந்து கொண்டிருக்கிறேன் என்பதையும் தங்களிடம் நான் கூற வேண்டும். மேலும் தங்களுடைய நூறு வீரர்களுக்கும் வீர சுவர்க்கம் புகுவதற்குத் தாங்கள் இப்போதே அநுமதி வழங்கிவிட வேண்டும். வழியில் ஆங்காங்கே வீரர்களை நிறுத்தி விட்டுத்தான் நான் மதுரைக்குள் புகுந்திருக்கிறேன். இவற்றையெல்லாம் இப்போதே நான் தங்களிடம் கூறுவது நல்லதல்லவா?"



"அட்சதையைச் சிந்தாமல் பார்த்துப் போடுங்கோ!"

அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபருக்குத் தலை சுற்றியது. மின்னல் வேகத்தில் காரியங்களை முடித்து விடலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தவர் அவர். அவனோ வழியெங்கும் இடி இடிக்கும் படை வீரர்களை நிறுத்தியிருக்கிறானும்! அவனுடைய அஞ்சாமையைக் கண்டு அவர் அஞ்சினார்.

புலவன் யாரையும் வழியில் நிறுத்தி வைக்கவில்லை. அவனுடைய கற்பனையில் உதித்த வீரர்கள் அவர்கள். அவன் ஏதோ திட்டமிட்டு அவர் செயலைத் தடுக்க விரும்புகிறான் என்பது கயல்விழிக்குப் புலப்பட்டு விட்டது. தீவர்த்திகளின் ஒளியிலிருந்து அவள் மெல்ல நழுவிச் சென்றாள். தன் தந்தையின் செவிகளில் ஏதோ கூறி விட்டுத் திரும்பி வந்தாள்.

பைந்தமிழ்க்குமரனை நேரே தம்முடைய மாளிகைக்கு அழைத்துச் செல்வதைத் தவிர அவருக்கு வேறு வழியில்லை. அங்கேயே அவனை அவரால் சிறை வைக்க முடியும். தப்பிச் செல்லாமலும் கண்காணித்துக் கொள்ள முடியும்; பிறகு சோழ நாட்டுக்கு அனுப்பி வைக்கவும் முடியும்.

நேரே தம்முடைய மாளிகைக்கு அவனை அழைத்து வருமாறு கட்டளையிட்டுவிட்டு, குதிரை மீது தாவி ஏறினார் அமைச்சர். படையினர் புடைசூழ அவன் கைவிலங்கோடு ஒரு ரதத்தில் ஏற்றப்பட்டான். அவனைக் கைப்பற்றிய கூட்டம் அமைச்சரின் மாளிகையை நோக்கித் திரும்பியது. அவனை மாளிகை விடுதிக்குள் வைத்துக் கதவுகளைப் பூட்டச் செய்தார் அமைச்சர். ஐம்பது ஐம்பது பேர்களாக மாறி மாறிக் காவலுக்கு நிறுத்தி வைத்தார். அவன் தப்பி ஓடுவானானால் ஐம்பது வீரர்களின் தலைகளும் பறி போய்விடும் என்பதை அவர் எச்சரிக்கத் தவறவில்லை.

ஒரு நாழிகை நேரந்தான் சென்றது. அதற்குள் தீவர்த்திகளும் கையுமாகக் குடிமக்களின் கூட்டம். அமைச்சரின் மாளிகையின் முன்பு பட்டி மண்டபத்தின் முன்னால் திரண்டிருந்த கூட்டம் அது. விநாடிக்கு விநாடி கூட்டம். அலை அலையாகப் பொங்கிக் கொண்டே வந்தது.

கூட்டத்தினரை விலக்கிக் கொண்டு வரும் துணிவு ஒரே ஒருவருக்குத்தான் இருந்தது. அவர் விழுப்பரையர்!

அமைச்சரின் முன்பு போய் அவர் நின்றார். அவரைச் சுட்டு எரித்துவிடுவதுபோல் விழித்துப் பார்த்தார் அமைச்சர். விழுப்பரையரோ சாளரத்தின் வாயிலாக வெளியே தெருவில் எரிந்து கொண்டிருந்த ஆயிரமாயிரம் தீவர்த்திகளை அவருக்குச் சுட்டிக் காட்டினார்.

"அவர்கள் எதற்காக இன்னும் பொறுத்துக் கொண்டிருக்கிறார்கள், தெரியுமா?" என்றார் விழுப்பரையர். "தங்கள் மாளிகைக்குத் தீயிட்டால், அதனால் புலவருக்கும் தீங்கு நேருமே என்ற ஒரே காரணத்துக்காகத்தான்."

"என்ன நேர்ந்தாலும் நேர்ந்து விட்டுப் போகட்டும். இன்றைக்கு என்ன நேருகிறதோ இதேபோல் ஆயிரம் மடங்கு அழிவை நாளைக்கே நடத்தப் போகிறார் இராஜ இராஜ சோழர். இப்போதைக்கு என்னால் விடுவிக்க முடியாது."

"அவரை விடுவிக்கும்படி கோருவதற்கு நானும் இங்கு வரவில்லை. அவர் தாராளமாகச் சிறையில் இருக்கட்டும். ஆனால் பாண்டியர் தலைநகரத்தில் இல்லாதபோது தங்களுக்கு ஏதும் நேர்ந்து விட்டால் அது இந்தப் பாண்டிய நாட்டுக்கே இழுக்காகும். நான் இந்த நாட்டின் பண்பைக் காக்க விரும்

பும் புலவன். அதனால் தங்கள் உதவியை நாடி வந்திருக்கிறேன்.''

''என்ன செய்ய வேண்டும்?''

''சற்று என்னோடு முகப்பு வாயிலுக்கு வாருங்கள். குடிமக்களை அமைதியோடு திருப்பி அனுப்புவது என் பொறுப்பு. தாங்கள் என் அருகில் வந்து நின்றால் போதும்.''

அமைச்சர் விழுப்பரையருடன் முகப்புக்கு வந்தார். தீவர்த்தி ஒளியில் அவர்கள் நின்று கொண்டார்கள். விழுப்பரையர் குடிமக்களைக் கையமர்த்தியவாறே கூறலானார்:

''பெருமக்களே! புலவரிடம் தாங்கள் கொண்டுள்ள பேரன்பை என்னால் உணர்ந்துகொள்ள முடிகிறது. நானும் ஒரு புலவன். ஆனால் அமைச்சரின் செய்கையால் நாம் ஆத்திரம் கொள்ளக் கூடாது. அவர்கள் சோழப் பேரரசின் கட்டளை எதுவோ அதைச் செய்திருக்கிறார்கள். அது அவர்கள் கடமை. இப்போது புலவருக்கு ஏதும் நேர்ந்துவிடாது. நம்முடைய பாண்டியர் தலைநகரத்துக்குத் திரும்பியவுடன், அவரே நம் புலவருக்கு நீதி வழங்குவார். அரசர் நீதிக்குப் புறம்பாக அமைச்சர் ஏதும் செய்துவிடமாட்டார். இந்த உறுதியை நான் அமைச்சரின் சார்பில் தங்களுக்கு அளிக்கிறேன்.''

அமைச்சரின் முகம் இந்த உறுதிக்கு உடன்படவில்லை என்பதைக் காட்டியது. 'பாண்டியர் நீதி வழங்கும் அதிகாரம் இதில் எங்கே இருக்கிறது?' என்பது போல் விழித்து நோக்கினார் சயங்கொண்ட சோழ வல்லபர்.

''நான் தங்கள் சார்பில் உறுதியளித்தது சரிதானா?'' என்று கேட்டார் விழுப்பரையர்.

அமைச்சர் பதில் அளிக்கவில்லை.

''அமைச்சர் நேரில் உறுதிமொழி அளிக்க வேண்டும்!'' என்று பல குரல்கள் ஒன்றாக எழுந்தன. ''அதை அவர் காப்பாற்றவும் வேண்டும்!''

''அமைச்சரே! தங்கள் உயிரை இப்போது நான் இழக்க விரும்பவில்லை!'' என்று அமைச்சரின் செவிகளில் ரகசியமாகக் கூறினார் விழுப்பரையர். ''கூறிவிடுங்கள். தங்கள் எண்ணத்தைப் பாண்டியரின் வாயிலாகவே நிறைவேற்றிக் கொள்ளுங்கள்.''



''இதென்ன பச்சை நிறமா இருக்கு! இது என்ன அரிசி?''
''பச்சரிசி!''
''ஆமாம்! இது ஒரே புழுவாக இருக்கே? இது என்ன அரிசி?''
'''புழு'ங்கலரிசி!''

இது ஏற்ற யோசனையாகத் தோன்றியது அமைச்சருக்கு.

''அவ்வாறே உறுதியளிக்கிறேன்!'' என்று கூறினார் அமைச்சர். விழுப்பரையரின் முறையீட்டுக்குப் பணிந்து அமைதியோடு கலைந்து சென்றனர் பாண்டிய மக்கள். விழுப்பரையரும் புறப்பட்டார். சிறைக்குள் அமைதியோடு உறங்க முயன்றான் பைந்தமிழ்க் குமரன். கயல்விழியும் அவனைச் சார்ந்தவர்களும் அந்த நகர மாந்தரும் அன்றைக்கு உறங்கவில்லை. அமைச்சர் சயங்கொண்ட சோழ வல்லபர் அன்று இரவு முழுவதையும் பகலாக்கிச் சிந்தித்தார்.

மறு நாள் அவருடைய ரதம் பழமுதிர் சோலைக்குச் சென்றது. பாண்டியருக்கு அலட்சியமாக வணக்கம் செலுத்தி விட்டு அவர் அருகில் அமர்ந்தார். நடந்த செய்திகளைக் கூறினார். பாண்டியருக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை.

''தாங்கள் இரண்டில் ஒன்று முடிவு செய்ய வேண்டிய நேரம் இப்போது வந்திருக்கிறது: தங்களுக்கு அந்தப் புலவன் ஒருவனுடைய உயிர் முக்கியமானதா? அல்லது பல்லாயிரக்கணக்கான குடிமக்களின் உயிர் முக்கியமானதா?''

பாண்டியர் சிந்தனை செய்தார். ''எது நீதியோ, எது நெறியோ, எது தர்மமோ அதுதான் முக்கியமானது...''

''தாங்கள் இப்போதே மதுரைக்கு என்னோடு திரும்பி வந்து சபை கூட்ட வேண்டும். புலவனை விசாரணை செய்து, ஒன்று அவனுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும். அல்லது கங்காபுரிக்கு அவனை அனுப்பி வைக்க வேண்டும். இந்த இரண்டில் எது நீதியோ அதுதான் நீதி! பாண்டிய நாட்டை மறு படையெடுப்பிலிருந்து காக்கத் தாங்கள் நிலைநாட்ட வேண்டிய நீதி!''

பாண்டியர் இருதலைக்கொள்ளி எறும்பானார். மறுபடியும் போர் என்ற ஒன்றை நினைக்கவே அவர் நெஞ்சம் பதறியது. 'பாண்டிய நாட்டை மீண்டும் அழிவுக்குள்ளாக்குவதா? அல்லது அந்த ஒருவனை அழிப்பதா?' (தொடரும்)



திரிவிக்கிரமனாகிய திருமால்



மதுரையில் [வலக்கால்] தூக்கி ஆடிய நடராஜன்

எல்லாம் வல்ல இறைவன் எல்லோரினும் பெரிய கலைஞன் ஆவான். அக்கலைஞனுக்குச் சத்தியம் மேடை ஆகிறது; ஞானம் அம்மேடையில் விளக்காகி ஒளிபொழிகிறது. அறியாமைத் திரை விலகியபின் இந்தச் சத்திய அரங்கம் புலனாகிறது. தர்ம பீடத்தின் மீது இறைவன் காட்சி தருகிறான்.

அங்குதான் —

கலை மலர்கிறது !

இறைவனது லீலை, அடியார்களின் நம்பிக்கை, கலைஞனது பசுமையான கற்பனைகள் இவற்றின் பிணைப்பிலே பிறக்கும் இத்தகைய ஞானமும் பக்தியும் அழகும் இணைந்த தெய்வக் கலைக் காட்சிகளில் ஒன்றே ஆண்டவனின் தூக்கிய திருவடி. தூக்கிய திருவடி மூலம் இறைவன் உணர்விக்கும் சத்தியங்கள் பலப் பல. பல சந்தர்ப்பங்களில் இறைவன் பாதத்தைத் தூக்கிப் பாபத்தை அழித்திருக்கிறார். அதையும் ஓர் அழகோடு — அருமையான கலையாகவே, செய்திருக்கிறார். சிவபெருமான், மகாவிஷ்ணு ஆகிய இருவரின் திருவடிகளாலும் பரம்பொருளானது உலகம் உய்யப் பெறும் செயல் புரிந்துள்ளது. சேவடியைச் சென்னியளவு தூக்கி ஊர்த்துவ தாண்டவம் புரிந்த நடராஜ மூர்த்தியும், மூவுலகும் மலரடி பரப்பிய உலகளந்த உத்தமனும் இன்றி நமது தத்துவமும், பக்தியும், கலையும் உண்டா ?

பொன் திகழும் மேனியாளும், நின்றுலகம் தாய நெடுமாலும் திருவடிகளைத் தூக்கிக் கொண்டு ஆக்கிய அற்புதங்கள் சிலவற்றை இங்கு காண்போம்.

தாருகவனத்து ரிஷிகள் மிகவும் கர்வம் கொண்டார்கள். இவர்களது கர்வத்தை அடக்கச் சிவபிரான் பிக்ஷாடனராகவும், விஷ்ணு மோகினியாகவும் புறப்பட்டார்கள். பிக்ஷாடனரது வடிவழகில் சிந்தை மயங்கிய ரிஷிபத்தினிகள் நியமம் மறந்தனர். மோகினியைப் பார்த்து மோகம் கொண்ட ரிஷிகள் தவத்தை மறந்து அவளைப் பின்தொடரலாயினர். முறை தவறிய முனிவர் கூட்டம் யாக பலனை இழந்தது. ரிஷிகளின் செருக்கு சிதைந்தது; அவமானமுண்டாயிற்று. தமது தவற்றை மறைத்து, தம் மனைவியர் மனம் கவர்ந்த பிட்சாடனனை மாய்ப்பதற்காக அபிசார ஹோமம் செய்ய ஆரம்பித்தனர். அந்த ஹோமகுண்டத்திலிருந்து புலியும், பாம்பும் எழுந்தன. சிவபிரான் புலியை உரித்துத் தோலை அணிந்து கொண்டார். பாம்பை ஆபரணமாக அணிந்து கொண்டார். இந்த நிலையில் கோபமும், ஆனந்தமும் மாறி மாறி வர நடனமாடினார் சிவபிரான். ஆட்டத்தின் இடையே ஹோமகுண்டத்திலிருந்து முயலகன் என்ற அஞ்ஞான உருவம் பிறந்தது. ஒயிலாக நளின நடனம் புரிந்த நடராஜன் திருவடியால் முயலகனை அழுத்தினான்.

அந்த அற்புத நடனத்தைக் காணக் கொடுத்து வைக்காதவர்களில் பரமேசுவரனின் பரம பக்தர்களான பதஞ்சலியும், வியாக்ரபாதரும் இருந்தனர். சுவாமியின்

# தூக்கிய திருவடி

வி. கோபாலன்

அற்புதத் தாண்டவத்தைத் தாங்களும் காண அருள வேண்டும் எனச் சிவபிரானை அவ்விருவரும் வேண்டிக் கொண்டனர். இருவரையும் தில்லைக்குச் செல்லப் பணித்தார் சிவபிரான். தில்லைப் பொன்னம்பலத்தில் நடனமாட அவரும் அங்கு வந்து சேர்ந்தார். தில்லை வனம் அப்போது காளியின் ஆளுகையில் இருந்தது. தன்னோடு நடனமாடி வெல்லச் சிவனை அழைத்தாள் காளி. போட்டி உக்கிரமாக ஆயிற்று. சிவபிரான் நடனக் கலையிலேயே ஒரு தந்திர நிலையில் நின்று சமாளிக்கத் துணிந்து இடது காலை ஊன்றி வலது காலை அநாயாசமாகத் தூக்கி விட்டார் தலைக்கு மேலே. இந்த ஆட்டத்தைக் காளி ஆடவில்லை. காரணம், காளி என்ற உக்கிர தேவதையாக நாம் அவளைக் கூறினாலும் அவளிடமும் பெண்மையின் அடக்கங்கள் நிரம்பி இருந்தன. பெண்ணானவள் ஒரு போதும் பாதத்தை உயரத் தூக்கலாகாது என்ற பண்புக்குக் கட்டுப்பட்டே அவள் நடனப் போட்டியில் தோல்வியை ஏற்றாள். தூக்கிய திருவடியின் மூலம் வெற்றியைச் சாதித்துக் கொண்டு விட்டார் சிவபிரான்.

காளி தில்லையின் எல்லைக்கே சென்று கோயில் கொண்டு விடுகிறாள். திருவடிகளைத் தூக்கித் தில்லையம்பலத்தில் நடராஜனாக — கூத்தப் பிரானாக — எம்பெருமான் எழுந்தருளி விடுகிறான்.

அந்தத் தாண்டவத்தின் உட்பொருள் எத்தனை எத்தனையோ! தூக்கிய காலின் தத்துவங்கள் எத்தனை எத்தனையோ! குறிப்பாகத் தத்துவங்களுக்கு அப்பாற்பட்ட எம்பிரானின் அனுக்கிரகத்தையே தூக்கிய திருவடி குறிக்கும் என்பர். தத்துவம் கலந்த கலைத் திருவடியைத் தூக்கி ஆடும் பெருமானைச் சோழர், பாண்டியர், பல்லவக் கலைஞர்களும் எல்லோராச் சிற்பிகளும் சிற்பத்திலும், படிமத்திலும் வடித்து வணங்கியிருக்கின்றனர்.

**யா**னை வடிவில் ஓர் அசுரன்: கஜாசுரன் என்று பெயர். நல்லோர்க்கு அவன் இழைத்த அநீதிகள் அளவிறந்தன. தானே வலுவில் சிவபிரானிடம் போரிட வந்தான். கோர வடிவம் பூண்டு கஜாசுரன் உடலினுள் சிவன் புகுந்தார். நாதனுக்கு என்ன நேருமோ என உமாதேவி அஞ்சிப் பதைபதைத்தாள். கஜாசுரனைக் கிழித்துக் கொண்டு வெளிப்பட்ட சிவன், அவனது தோலை உரித்துப் போர்த்திக் கொண்டு, அசுரனைத் திருவடிகளால் மிதித்து நசித்து வதைத்தார். யானை மஸ்தகத்தில் பதித்த அவரது திருவடி அதருமத்தை நாசம் செய்து ஈசனின் நிக்கிரக சக்தியைக் காட்டுகிறதெனில் அப்போது தூக்கப்பட்ட அவரது மற்ற திருவடி, 'நிக்கிரகம் செய்யினும் என் அனுக்கிரக சக்தி என்றும் போய் விடவில்லை' என்கிறது.

இறைவன் திருவடியைத் தூக்கிய எத்தனையோ பெரு நிகழ்ச்சிகளில் மூன்றாவது சம்பவம்: விதிவசப்படி மார்க்கண்டேயனுக்கு உரிய பதினாறு வருட ஜீவிய காலம் முடிந்தவுடன் காலன் அவன் உயிரைப் பிரிக்க வந்து விட்டான். மார்க்கண்டேயன் பரமனைப் பூஜிக்கையில் பாசக் கயிற்றை வீசி விட்டான். மார்க்கண்டேயன் லிங்கத்தை அணைத்துக் கொள்கிறான். காலனுக்கே காலம் சரியில்லை! லிங்கத்தையும் சுற்றிப் பாசக் கயிற்றை வீசுகிறான் காலன். லிங்கத்தினின்று வெகுண்டெழுந்து உதித்த சிவபிரான் காலனைக் காலால் உதைத்துப் பக்தனைக் காக்கிறார். கால சம்ஹாரனின் தூக்கிய திருவடி காலனை மாய்த்து, பக்தனைக் காத்து விட்டது.

---

ஊர்த்துவ தாண்டவமூர்த்தி | கஜசம்ஹாரமூர்த்தி | கால்தூக்கியாடும் கலைமகள் (பேலூர்)



சிவபிரானைப் போன்றே விஷ்ணுவும் திருவடிகளைத் தூக்கிப் பெரும் சாதனைகள் புரிந்திருக்கிறார்.

வாமனன் கதை ஓர் உதாரணம்: -

மகாபலி சபையில் சிறந்தவனாயிருப்பினும் தன்னும் தரவொண்ணாதது எதுவுமில்லை என்ற அகந்தையுடனேயே தானம் செய்த தால், அவனது அகந்தையையே ஆண்டவன் தானம் கேட்க நேரிட்டது. மாவலி ஒரு பெரும் வேள்வி செய்தான். அந்தணர்களுக் கெல்லாம் வாரி வழங்கினான்.

மகாபலியின் அசுர சக்தியும், புகழும் வியாபித்திருக்கும் மண்ணிலும் விண்ணிலும் தம் பேருருவத்தை வியாபிக்கச் செய்யத் திருவுளம் கொண்டார் திருமால். பேருருவம் கொண்டு வென்றுவர வாமனக் குள்ளன் வடிவில் போனார் மாயவன். மாவலியிடம் மூவடி மண் யாசித்தார். மனமுவந்து அளித் தான் மாவலி. வரம் கிடைத்ததும் வாமனன் விசுவரூபம் எடுத்துத் திருவிக்கிரமன் ஆகி ஓரடியாகப் பூமியையும், இரண்டாவது அடி யாக வானத்தையும் அளந்து, மூன்றாவது அடியை மாவலியின் தலை மீதும் வைத்து அரக்கனின் அகந்தையை அழித்தார்.

"நின்றதாள் மண்ணெலாம்
நிரம்பி, அப்புறம்
சென்று பாவிற்றிலே
செறிது பார்எனு:
ஒன்ற வானகம் எலாம்
ஒடுக்கி உம்பரை
வென்றதாள் மீண்டது
வெளி பெருமையே!"

என்று இதனையே படம் பிடித்துக் காட்டு கிறார் கம்பர். திருவடியைத் தூக்கி உலகளந்த பெருமானை ஆழ்வார்கள் பாடியிருக்கின்றனர்.

"மூவுலகும் ஈரடியால
முறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சேவடி!"

எனப் பெருமாளின் பேருருவ வரலாற்றைத் தமிழ்ப் பழம் பெரும் காப்பியம் சிலப்பதிகார மும் சொல்கிறது.

நாராயணன் தூக்கிய திருவடியுடன் கம்பீரமாகக் காட்சி தரும் அற்புதக் கோலம் கலைச் சிற்பங்களில் நன்கு கௌரவிக் கப்பட்டுள்ளது.

1913ம் ஆண்டு தக்ஷசிலத்தில் டீர்மவுண்ட் என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட சதுரக் கல் ஒன்றில் 'உலகளந்த கோல வடிவங்கள்' கொண்ட சிற்பங்கள் காணப்படுகின்றன. அக்கல் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த மௌரியர் காலத்தது.

உலகளந்தார் பாணி வடிவத்துக்குப் பரத சாஸ்திரத்தில் லதா திலகம் என்ற பெய ருண்டு. உண்மையில் அது ஒருவகை நடனமே யாகும். லதாதிலகம் என்பது தாண்டவ லக்ஷணங்களில் ஒரு கரணம். நடனம் ஆடும் போது ஒரு காலாலேயே நெற்றிக்குப் பொட்டிட்டுக் கொள்ளும் சாகஸமே லதா திலகம். என்ன கலை! என்ன கற்பனை!

அவதாரங்களில் விஷ்ணு தூக்கிய திருவடி களால் சாதித்த மகத்தான செயல் அகலிகா சாப விமோசனமாகும். முனி சிரேஷ்டரின் சாபத்தால் கல்லானாள் அகலிகா. பாதகத் தைத் துடைத்தெறிந்த பாதங்களின் இப் பெருமை அனைவரும் அறிந்ததே. வராக அவதாரத்திலும் தாம் வீழ்த்திய அரக்க னின் மீது காலைத் தூக்கி வைத்து மிதித்துத் தேவியை மீட்டுச் செல்வதாகச் சொல்வர்.

கண்ணபெருமான் காளியமர்த்தனத் தையே நர்த்தனமாகச் செய்து திருவடி தூக் கியதையும் நாம் அறிவோம்.

சிவபிரானும் திருமாலும் கலைஞர்களாகத் திருவடியைத் தூக்கி ஆடிய அற்புதத்தைக் கண்டோம். கலைமகளான சரஸ்வதியே மிகப் பொருத்தமாக வீணை ஏந்தித் திருவடி தூக்கி எழிலுடன் நடம் புரியும் கோலாகலச் சிற்பம் ஒன்றைப் பேலூர் ஆலயத்தில் காண்கிறோம். நர்த்தன விநாயகர் கொழுத்த திருப்பாதத் தைத் தூக்கியாடும் அழகிலும் நாம் உள்ளத் தைப் பறி கொடுத்திருக்கிறோம். தூக்கிய திருவடிகளை எண்ணும்போது ஓர் உண்மை உள்ளத்தில் பதிகிறது. தெய்வம் திருவடி தூக்குவது தீமையை விரட்டி, நன்மையை நாட்டுவதற்கு என்று சொல்வது தத்துவம். அவலங்களை விரட்டி அழகுகளை நாட்டுவதற் காகத் திருவடிகளைத் தெய்வம் தூக்கு கிறது என்பது கலை. அந்தக் கலையே கடவுள்.



## திருவாதிரைத் திருநாள்

திருவாதிரைத் திருநாளை முன்னிட்டு இவ்விதழ் அட்டையில் ஓவியர் மணியம் சிவபெருமானையும் தேவியையும் சித்திரித்திருக்கிறார்

**கோடம்பாக்கம் வடபழனியில் டிசம்பர் 20ந் தேதி ஞாயிற்றுக்கிழமை ஆர்த்ரா தரிசனம் நடைபெறுகிறது**

நம் விஜயகுமாரியிடமிருந்து மலரும் இரகசியம்

# 'எனது அன்றாட அழகுப் பராமரிப்பு: லக்ஸ்'

வெள்ளித் திரை விண்மீன் விஜயகுமாரி விளம்புகிறார்: 'எனது அன்றாட அழகுப் பராமரிப்பு முறையை நீங்களும் மேற்கொள்ளலாம். வனம் கொழிக்கும் லக்ஸ் நுரையிலே இருக்கிறது தூய்மை வாய்ந்த மென்மை: உங்கள் மேனி யெழிலைச் சிறப்பிக்கும் தன்மை. மணமோ மதிமயக்கும். உமதெழிலும் மலராட்டுமே லக்ஸ் உதவியால்.




**லக்ஸ் டாய்லெட் சோப்: சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்**

வெண்மையிலும், வானவில் வண்ணங்கள் நான்கிலும் உண்டு.

LTS. 177-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

# ராஜயோகம்

14

கதை: தம்பு * சித்திரம்: செல்லம்

மஜியப்பனின் அறையில் யோகம்...

இதை எல்லாம் படித்து
பார்த்தால் எனக்குக்கூட
மசிருவசியம், வைத்திய
வைத்தியம் எல்லாம்
வரும் போலிருக்கிறதே.
கொஞ்சம் கொஞ்சமாக
எல்லாவற்றையும் எடுத்து
கொண்டு போய்ப் படித்து
விட வேண்டும்.

யோகம் தன் அறையில்...



இந்தாறு நாள் முன்னும்
இரண்டு வைத்தியப் புத்தகங்
களைத் தேடிப் பார்த்தேன்.
அகப்படவில்லை. இன்னும்
இரண்டு மூன்றைக் காணோம்!
இங்கே இருக்கிறதா?




எல்லோரும் அவரவர்கள் அறைகளுக்குப் போங்கள். நான் உங்கள் சாமான்களைத் தேடிப் பார்க்கிறேன்...


ராஜாவும் வரவில்லை. அந்தப்புது நோயாளிப் பெண்ணும் இவர்களோடு வரவில்லை.
அந்தப் பெண்ணை போய்ப்பார்த்துவிட்டு வருவோம்.


போகத்தைக் காணோமே?
இராத்திரியிலே அறையில் இருக்கிறதில்லை போலிருக்கு? தேடிப்பார்க்கலாம்.


அதோ போய்க் கொண்டிருக்கிறாள்.
ஆமாம்! அவள்தான். அவளுக்குத் தூக்கத்தில் நடக்கிற வியாதி உண்டு போலிருக்கு. நான் முதலிலேயே சந்தேகப் பட்டேன்.
தொடரும்

# $6\frac{1}{2}\%$

## வட்டி
## உங்கள் பிக்ஸட்
## டிபாஸிட்டுகளுக்கு

உங்கள் பிக்ஸட் டிபாஸிட்டுகளின் பேரில் வருடத்திற்கு $6\frac{1}{2}\%$ வரை வட்டி அளிக்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறோம்.

முழு விவரங்களுக்கு உங்கள் அருகாமையில் உள்ள எமது கிளை ஆபீஸ் மானேஜரை அணுகக் கோருகிறோம்.



—: பாங்கின் நிர்வாகக் காரியாலயக் கட்டிடம் :—

# கனரா பாங்க் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1906)

பாங்க் மட்டுமல்ல - பாங்கைவிட மேலான பாங்க்

பதிவுக் காரியாலயம்: மங்களூர்

நிர்வாகக் காரியாலயம்: பெங்களூர்

உலகம் முழுவதும் பிரதிநிதிகள்

இந்தியாவில் 235 கிளைகளுக்கு மேல் உள்ளன

# சோதனையில் சாதனை

"ரேடியோவில் சேர்ந்து உழைப்பவர்களுக்கு அந்த வேலை செய்வதில் உள்ளத்தில் மகிழ்ச்சி வளர வேண்டும்; எடுத்த காரியத்தைத் திறமையாகச் செய்து முடிக்கும் போது உள்ளத்தில் திருப்தி பொங்க வேண்டும் என்று ஆசிரியர் சரியாகச் சொல்லியிருக்கிறார். அத்தகையவர்கள் தங்கள் வாழ்க்கையை இந்தப் புதுத் தெய்வத்துக்காக அர்ப்பணம் செய்யலாம். நிலையத்து உத்தியோகஸ்தர், பேச்சாளர், சங்கீதக்காரர், ஆசிரியர்கள், நடிகர்கள், எல்லோருக்குமே நூல் மிகப் பயன்படும். இந்த நூலுக்குப் பெயர் 'ரேடியோ வாத்தியார்' என்றே வைத்திருக்கலாம்."

—'ஒலிபரப்புக் கலை' என்னும் நூலுக்கு ராஜாஜி அவர்கள் அளித்துள்ள ஆசிகளில் ஒரு பகுதியாகும்.

அந்த 'ரேடியோ வாத்தியாரு'க்கு வாத்தியாராக இருந்து அதை உருவாக்கியவரும், இலங்கை வானொலி நிலையத்திலும் பி. பி. ஸி. நிலையத்திலும் பணியாற்றி ஓய்வு பெற்ற திரு சோ. சிவபாதசுந்தரம் அவர்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது ஒலிபரப்பு உலகத்தில் அவருக்குக் கிடைத்த பலவித அனுபவங்களைக் கேட்டு ரசிக்க முடிந்தது.

1929ம் ஆண்டிலேயே ஒலிபரப்புக்கு இலங்கையில் வித்திடப்பட்டது. முதல் உலக யுத்தத்தின்போது அட்டகாசம் செய்து கொழும்புக் கடற் பகுதியில் வீழ்ச்சியடைந்த 'எம்டன்' யுத்தக் கப்பலிலிருந்து மீட்கப்பட்ட ஒரு 'ரேடியோ டிரான்ஸ்மீட்டர்' இந்தத் துறைக்கு வழிகோலியது. ஆனால் 1934ம் ஆண்டிலிருந்துதான் அந்த நாட்டவர் அதில் கொஞ்சம் அக்கறை காட்டினர். ஒரு தைத் திருநாளன்று ஒரே ஒரு அறிவிப்பாளருடன் இசைத்தட்டு சங்கீதம் காற்றிலே மிதந்தது. பாட ஆசைப்பட்டவர்களுக்கெல்லாம் நிறையச் சந்தர்ப்பம் உண்டு. அவர்கள் எதை எப்படிப் பாடினாலும் சத்தம் வந்தால் சரி! அதே மாதிரியே பேச விரும்புபவர்களும் அனுமதிக்கப்பட்டார்கள். சர்க்கார் தந்தி இலாகாவின் நிர்வாகத்தின் கீழ் ஒரே ஒரு சிப்பந்தியின் உதவியால் இயங்கிய அத்துறையில் வேறு என்ன செய்ய முடியும்? செய்திகளை அப்படியே தினசரிப் பத்திரிகைகளை வைத்துக் கொண்டுதான் படித்தார் அறிவிப்பாளர்.

நாளடைவில் சிங்கள, ஆங்கில, தமிழ் அறிவிப்பாளர்கள் மூவர் ஓர் ஒலிபரப்பு சூப்பரெண்டென்டின் கீழ் வேலை செய்யத் தொடங்கினார்கள்.

1942ம் ஆண்டு ஏப்ரல் மாதம். இரண்டாவது உலக யுத்தம் தீவிரமாக இருந்த வேளை. வானொலி நிலையச் சிப்பந்திகள் குண்டு வீச்சுக்கு அஞ்சி ஐந்தாம் தேதியிலிருந்து வரவேயில்லை.

இந்த நிலையில்தான் பதினைந்தாம் தேதியன்று வானொலி நிலையத்திலிருந்து திரு சிவபாதசுந்தரம் அவர்களுக்குத் திடீர் அழைப்பு வந்தது. அவர் அப்போது ஈழகேசரி ஆசிரியர் குழுவில் பணியாற்றி வந்தார்.

அவரை அழைத்த நிர்வாகி முன்னுரையுடனோ, விளக்கத்துடனோ விஷயத்தை ஆரம்பிக்கவில்லை. "ஐயா! நீங்கள் இந்த வானொலி நிலையத்தில் பணியாற்றத் தயாரா?" என்பதுதான் அவர் பட்டென்று வீசிய ஒரே கேள்வி.

திரு சிவபாதசுந்தரம் 'சம்மதம்' என்று தலையை ஆட்டினார். உடனடியாக அவருக்கு இசைத்தட்டுகள் போடுவது எப்படி, ஒலிபரப்பை ஆரம்பிப்பது எப்படி, நிறுத்துவது எப்படி என்ற மூன்றே விஷயங்களடங்கிய 'ஸ்விட்ச்'களைக் காண்பித்துவிட்டு அந்த நிர்வாகி போய்விட்டார். வேலை ஏற்றுக்கொண்ட நண்பரின் பணி தொடங்கியது. சம்பளம் என்ற பேச்செல்லாம் அப்போது கிடையாது. முறையான சம்பளம் பட்டுவாடாச் செய்வது என்பது 1945ல்தான் தொடங்கியது. கௌரவ உத்தியோகம்; வேலைக்கான எந்தவிதமான திட்டமுமில்லை.

உள்ளூர் அம்மையார் ஒருவர் ஒரு நாள் மாலை வானொலி நிலையத்துக்குப் பாட வந்தார். சிவபாதசுந்தரம் அவர்கள் வெறும் அறிவிப்பாளர் மாத்திரமில்லை. சங்கீத ஞானமும் உள்ளவர். அந்த அம்மையார் பாடவிருப்பதற்கு ஒரு பட்டியல் தயாரித்துத் தரச் சொல்லி வாங்கிப் பார்த்தார்.

முதல் 'அயிட்டமே' அவரைச் சிந்தனைக்குள்ளாக்கியது. 'சோபில்லு சப்த' என்ற கீர்த்தனையின் தலைப்பை எழுதி 'நாதநாமக் கிரியை' என்று ராகம் குறிப்பிடப்பட்டிருந்தது. ஜகன்மோகினி ராகத்தில்தான் அந்தக் கீர்த்தனை அமைக்கப்பட்டிருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆனாலும் நாதநாமக்கிரியை



திரு. சிவபாதசுந்தரம்

ராகத்திலும் அப்படி ஒரு கீர்த்தனை இருக்கிறதோ என்று சந்தேகம் எழுந்தது. அந்தக் கீர்த்தனையைக் கொஞ்சம் பாடிக் காண்பிக்கும்படி கேட்டுக் கொண்டார்.

அந்த அம்மையார் பாடினார். சுத்தமான ஜகன்மோகினி ராகம். "இந்தப் பாட்டின் ராகத்தைத் தவறுதலாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இந்த ராகத்தின் பெயர் ஜகன்மோகினி" என்று விளக்கினார் அறிவிப்பாளர் சிவபாதசுந்தரம்.

"அதெல்லாம் இல்லே! என் பாட்டு வாத்தியார் நாதநாமக்கிரியை என்றுதான் சொல்லிக் கொடுத்தார். நான் அவர் சொல்லிக் கொடுத்த ராகத்தில்தான் பாடுவேன்" என்றார் பாடகி.

"ரொம்ப சரி! அப்படியே இப்போது பாடினது போல் பாடுங்கள். நான் செய்யும் அறிவிப்பை மாத்திரம் தயவுசெய்து காதில் போட்டுக் கொள்ளாதீர்கள்" என்று சொல்லி ஜகன்மோகினி ராகம் என்றே அறிவித்துத் தம் பணியைச் செய்தார்.

**1947**ம் ஆண்டு. லண்டன் பி. பி. ஸி. நிலையத்துக்குத் தமிழ் தெரிந்த ஒரு நிகழ்ச்சித் தயாரிப்பாளர் தேவையாக இருந்தது. இலங்கைத் தமிழரான சிவபாதசுந்தரம் இங்கிலாந்துக்குப் போய்ப் பணியாற்றும் வேலையும் வந்தது. மூன்று வருட ஏற்பாட்டில் பி. பி. ஸி. நிலையத்தில் தமிழ் சஞ்சிகை தயாரிப்பாளராக வேலை செய்தார். ஒலி பரப்புக் கலையின் பல முக்கிய நுணுக்கங்களைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்புக் கிட்டியது.

1950ல் அவர் இலங்கைக்குத் திரும்பியதும் இலங்கை வானொலி பிரதம நிர்வாகியாகப் பணியேற்றார். ஆனால் அந்தப் பதவி ஒரு தமிழருக்குப் போவதா என்ற ஏக்கத்தில் ஆறே வார காலத்தில் ஒரு சிங்களவர் அதில் புகுந்தார். அப்புறம் இரண்டு ஆண்டுகள் தமிழ்ப் பகுதியில் பணியாற்றி விட்டுத் திரு சிவபாதசுந்தரம் வானொலித் துறைக்கு வந்தனம் கூறிவிட்டு வெளிவந்தார்.

வானொலித் துறையில் பணி செய்வது என்பது கால ஓட்டத்துடன் போட்டி போட்டுக் கொண்டு ஓடும் பந்தயம் போன்றது. விநாடிக்கும் நிமிடத்துக்கும் அந்தத் துறையில் மதிப்பு அதிகம். பத்து வருஷ கால அனுபவத்தில் அவருக்குச் சோதனையோ, வேதனையோ, மன நிறைவோ கொடுத்த பல ஒலிபரப்பு விநாடிகள் இருந்திருக்கலாம். அந்த வகையில் அவருக்கு உவகை, திகைப்பு, வியப்பு நேர்ந்த சம்பவங்கள் இதோ சில!



"இவள்தான் என் மூத்த பெண் ராஜேசுவரி, அவள் மகேசுவரி, அடுத்தவள் சாமுண்டீசுவரி!"

"ஏது! சர்க்காரிலே குழந்தை பிறந்தா வரி போடறதுக்கு முன்னாடி நீங்களாகவே குழந்தைகள் பேரிலே வரியைப் போட்டு வெச்சுட்டேளே! பேஷ்! பேஷ்!"

முதல் காமன்வெல்த் பிரதம மந்திரிகள் மகாநாடு லண்டன்மா நகரில் ஏற்பாடாகியிருந்த வேளை. சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமராக வரும் நேருஜியைக் கண்டு செய்திகள் பதிவு செய்து கொள்ள பி. பி. ஸி. ஸ்தாபனத்தின் சார்பில் நண்பர்களுடன் திரு சிவபாதசுந்தரம் விமான நிலையத்துக்கு வந்திருந்தார்.

நள்ளிரவு வேளை; ஏற்கெனவே விமானம் வருகையில் கொஞ்சம் தாமதம். விமானத்திலிருந்து இறங்கிய நேருஜி, "இந்த விமானப் பிரயாணம் எனக்கு நல்லதே செய்திருக்கிறது. என் நெடுநாளைய முதுகு வலியைப் போக்கி விட்டது. ஆனாலும் நான் களைப்பாகவே இருக்கிறேன்" என்று வேடிக்கையாகச் சொல்லிக் கொண்டே பி.பி.ஸி. நிருபர்களை அணுகினார். களைப்படைந்திருப்பவரை எப்படிப் பேசச் செய்வது என்று நிருபர்களுக்குக் கவலை. ஆனால் நேருஜி அதே கணத்தில் "என் சிகரெட் பெட்டியைக் காணவில்லை. யாராவது ஒரு சிகரெட் கொடுங்கள்" என்றார்.

முன்னணியிலிருந்த திரு சிவபாதசுந்தரம் தம் சட்டைப் பையிலிருந்த சிகரெட் பெட்டியை எடுத்து நீட்டினார். வெளிச்சத்தில் அதைப் பார்த்த நேருஜி "ஆஹா! இது நான் உபயோகிக்கும் ரகம்தான்" என்று மகிழ்ச்சியுடன் வாங்கிக் கொண்டு நன்றி தெரிவிக்கும் முறையில் அதைக் கொடுத்தவரை அப்படியே அணைத்துக் கொண்டார்.

"என் வாழ்க்கையில் அந்தமாதிரி எனக்கு உவகையூட்டிய கணம் அதுவரை நேர்ந்ததில்லை" என்றார் சிவபாதசுந்தரம்.

இலங்கைப் பிரதமராக இருந்த சேனநாயகா அவருடைய காரியதரிசி ஸர் கந்தையா வைத்தியநாதன், இருவரும் விவசாய சம்பந்தமான வளர்ச்சிகளைக் கண்டறிய ஆஸ்திரேலிய நாட்டுக்குப் போய் விட்டுத் திரும்பிய வேளை. அதற்காகவே தான் அந்தப் பிரயாணத்தை மேற்கொண்டார்கள். திரும்பி வந்து கொழும்புத் துறைமுகத்தில் அவர்கள் இறங்கியதும் தமிழ் ஒலிபரப்புக்காக ஸர் கந்தையாவை அவர் சுற்றுப் பிரயாணம் பற்றிப் பேட்டி காணத் திரு சிவபாதசுந்தரம் போய்ச் சேர்ந்தார்.

யாழ்ப்பாணத்தில் விவசாயம் என்ற தமிழ்ச் சொல் வழக்கிலில்லை. அதற்குப் பதில் கமம் என்ற சொல்தான் நடைமுறையில் இருக்கிறது. கமத் தொழில் என்றால் விவசாயத் தொழிலைக் குறிக்கும்.

## அஞ்சலி

எத்தனை ஆண்டுகளானுல் என்ன? உளம் நிறைந்த அன்பின் நினைவுகள் நான்கு ஆண்டுகளில் மறைந்து விடுமா? மறையாது. டிசம்பர் 13-ந் தேதியுடன் ஸ்ரீமதி சுந்தரம்மாள் மறைந்து ஆண்டுகள் நான்காகின்றன. இன்றும் அவரது பிரியக் கணவர் திரு வி. தியாகராஜன் (முன்னுள் 'அபீஷியல் அஸ்ஸைனி') அவர்களும் அவரது குடும்பத்தினரும் சுந்தரம்மாளின் நல்லியல்புகளையும் நேயமனத்தையும் இம்மியும் மறக்கவில்லை. தங்களின் அன்பு நினைவுகளை ஸ்ரீமதி சுந்தரம்மாளின் ஆன்மாவுக்கு அளிக்கிருர்கள்.

ஸர் கந்தையாவிடம் எடுத்த பேட்டியில், ''தாங்கள் ஆஸ்திரேலியா முழுதும் சுற்றிப் பார்த்துவிட்டு வந்திருக்கிறீர்களே? அங்கு விவசாய சம்பந்தமாக என்னவெல்லாம் பார்த்தீர்கள்?'' என்றார் சிவபாதசுந்தரம், பொதுவான வானொலி சொற்பிரயோகத்தைக் கையாண்டு. ''அது சம்பந்தமாக ஒன்றும்பார்க்கவில்லை'' என்று பளிச்சென்று பதில் வந்தது. பேட்டி காண்பவரின் தலை சுற்றியது. ஆனாலும்




நீதிபதி: நீ ஏன் குடும்பத்தோடு சேர்ந்து இந்தக் குற்றத்தைச் செய்யத் துணிந்தாய்!
கைதி: நடமாடும் கோர்ட்டுன்னு எப்படி இருக்கும்னு எல்லோரும் பார்க்க ஆசைப்பட்டாங்க!

அதே விநாடியில் ஸர் கந்தையாவின் யாழ்ப்பாணத்துத் தமிழ் மின்னல் கீற்றாக நினைவுக்கு வந்தது. கொஞ்சம் கூடத் தயக்கத்துக்கு அடையாளமாக இடைவெளி கொடுக்காமல் ''கமத் தொழிலில் அந்த நாடு எப்படி முன்னேறியிருக்கிறது?'' என்று அடுத்த கேள்வியைப் போட்டார். ''ஆஹா! பிரமாதம். எல்லா இடங்களையும் பார்த்தோம்...'' என்ற ரீதியில் கடல்மடை திறந்த வெள்ளமாய்ப் பதில் வந்தது. நிலைமையும் சமாளிக்கப்பட்டது. அந்த வேகமான பேட்டியில், பிறகு ஒலிபரப்பைக் கேட்டவர்கள் கூட அந்த இடத்தின் சுருதிக் குறைவைக் கவனிக்கவில்லை.

''அன்றுபோல் நான் என்றும் திகைப்புக்காளானதில்லை'' என்றார் திரு சிவபாதசுந்தரம்.

1952ம் ஆண்டில் அதே பிரதமர் சேனநாயகா காலமானபோது அவருடைய அந்திம யாத்திரையைப் பல கட்டங்களிலிருந்து பொதுமக்களுக்கு வருணனை செய்ய ஏற்பாடாகியிருந்தது. சிவபாதசுந்தரத்தின் உதவியாளர் ஒருவர் பெரிய இலக்கியப் பித்தர். மேற்கோள்கள் வீசுவதில் மிகுந்த ஆர்வம் காட்டுபவர்.

அந்த உதவியாளர் ஓர் இடத்திலிருந்து அந்த அந்திம யாத்திரைக் கூட்டத்தை வருணிக்கக் கம்ப ராமாயணத்திலிருந்து 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற பாடலைக் கையாள ஆரம்பித்தார். கொஞ்சமும் பொருத்தமில்லாத இடமாயிற்றே! கேந்திர ஸ்தானத்திலிருந்து ஒலிபரப்பை மேற்பார்வை செய்து கொண்டிருந்த சிவபாதசுந்தரத்தை இந்த வர்ணனை தூக்கி வாரிப் போடச் செய்தது. ஒருகணம் செய்வதறியாது திகைத்தார். சட்டென்று அந்தப் பாடல் முடியும் வரையில் வேறு இசையைக் குறுக்கே புகுத்தி நிலைமையை ஒருவாறு சமாளித்தார்! இலக்கிய ஆர்வத்துக்கும் இடப் பொருத்தம் வேண்டுமல்லவா?

அவர் பி. பி. ஸி.யில் பணியாற்றிய காலம் விளக்கம் கோரும் தபால் ஒன்று மேலதிகாரிகளிடமிருந்து அவருக்கு வந்தது. தலைப்பைப் பார்த்தவுடன் ஒரு கணம் கலக்கம் அடைந்தார். பிறகு முழுதும் படித்துப் பார்த்தவுடன்தான் அவருக்குச் சரியாக மூச்சு வந்தது.

''வருடா வருடம் எடுத்துக் கொள்ள வேண்டிய விடுமுறையை நீர் ஏன் இன்னும் எடுத்துக் கொள்ளவில்லை?'' என்று காரணம் கேட்டிருந்தார்கள். மேலை நாடுகளில் எல்லா ஸ்தாபனங்களுமே தங்கள் சிப்பந்திகள் கண்டிப்பாக விடுமுறைச் சலுகையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். விடுமுறையில் கிடைக்கும் ஓய்வும் மாற்றமும் அவர்களுக்கு வேலையில் அதிக ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் தோற்றுவிக்குமென்பது அவர்கள் சித்தாந்தம்.

பி. பி. ஸி. ஸ்தாபனத்தில் பணியாற்றிய போது இந்தத் துறையில் அவருக்குச் சிறந்த உபயோகமான அநுபவங்கள் கிடைத்தன. ஐரோப்பிய நாடுகளில் உள்ள அநேக வானொலி நிலையங்களை நேரில் போய்ப் பார்வையிட்டார். அதன் விளைவாக, இலங்கை வானொலி நிலையத்தின் அபிவிருத்திக்கான பல நல்ல யோசனைகளை இலங்கை சர்க்காருக்கு அங்கேயிருந்தே எழுதி அனுப்பினார். அவைகளெல்லாம் இலங்கை சர்க்கார் நடைமுறையிலும் கொண்டு வந்தது.

அந்த நாட்களிலேயே பி. பி. ஸி. நிலையத்துக்குப் பேச வருபவர்களுக்குக் கணிசமான சன்மானம் கொடுப்பார்களாம். புதிதாகவோ அல்லது அவ்வளவு பிரசித்தமில்லாமலோ இருந்தால் ஒரு நிமிடப் பேச்சுக்கு ஒரு கினி (ஒரு பவுனுக்குக் கொஞ்சம் கூட) வீதம் கொடுப்பார்களாம். சற்றுப் பிரசித்தியானவர்களுக்கு நிமிடத்துக்கு மூன்றிலிருந்து ஐந்து கினிகள்வரை கொடுப்பார்களாம். பாரதத்திலிருந்து இங்கிலாந்துக்கு வரும் பல தமிழ் நாட்டுப் பிரமுகர்களைப் பேட்டி கண்டு தம் தமிழோசைச் சஞ்சிகைப் பகுதியில் ஒலிபரப்ப அவருக்குப் பெருமிதமாகவே இருந்ததாம்.

திரு சிவபாதசுந்தரம் ஒலிபரப்புத் துறையிலிருந்து ஓய்வு பெற்று விலகி விட்டாலும் தம் அநுபவங்களை அஸ்திவாரமாகக் கொண்டு ஒலிபரப்புக் கலை பற்றிய ஒரு புத்தகத்தைத் தமிழில் எழுதி வெளியிட்டு அந்தத் துறைக்கான தம் பக்தியைத் தெரிவித்துக்கொண்டிருக்கிறார்.

அவருடன் பேசிக் கொண்டிருந்துவிட்டு விடைபெற்றபோது அவர் வானொலி அறிவிப்பாளர்களுக்குத் தேவையான தகுதிகள் பற்றி எழுதியிருப்பது நினைவுக்கு வந்ததோடல்லாமல் ஒரு லட்சிய அறிவிப்பாளரை அவரிடமே கண்டோம் என்ற எண்ணமும் எழுந்தது.

—கோமதி சுவாமிநாதன்

## 21. அவளும் அவனும்

**ம**ன்னர் அலி ஆதில்ஷாவுடைய மணவினை விழாக்களிலே பூசப்கானால் மண்டையில் அடிபட்டுப் படுகாயமடைந்த தளபதி சித்திஹராஸன், ஏராளமான ரத்தப் பெருக்குக் காரணமாகப் பல நாள் படுத்த படுக்கையாகக் கிடந்தான். 'உயிருக்கு அபாயமில்லை. ஆனால் உடல் தேறி எழுந்திருக்கச் சில காலமாகும்' என்று கூறி விட்டார்கள், ரண வைத்தியத்தில் வல்லவர்களான ஹக்கீம்கள். மன்னர் ஆதில்ஷாவோ தாமே சித்திஹராஸனின் அருகிருந்து அவனது காயங்களுக்குச் சிறந்த மூலிகைகளைக் கொண்டு சிகிச்சையளித்து விரைவில் குணப்படுத்துவதில் கண்ணும் கருத்துமாகக் கவனம் செலுத்திவந்தார்.

மன்னரின் அன்பும் விசேஷ கவனிப்பும் சித்திஹராஸனை விரைவில் எழுந்து நடமாட வைத்தன. கரிய பெரிய உருவம் கொண்ட அபிசீனியனான அவன் சாதாரணமாகவே காண்பதற்கு அச்சம் தரும் தோற்றம் உடையவன். இப்போதோ தலையிலிருந்து இடது கன்னத்தின் வழியே தாடை வரை வாள் பதிந்த வடு வேறு அந்த முகத்தின் பயங்கரத்தை அதிகமாக்கிக் கொண்டிருந்தது. தன்னை இந்த நிலைக்கு ஆளாக்கியவனைத் தனக்குச் சமமாகப் பீஜப்பூர் படையில் பதவியளித்துக் கௌரவிக்காமல், அகமதுநகர் சுல்தானுக்குப் பரிசாகக் கொடுத்து விரட்டிய மன்னர் ஆதில்ஷாவிடம் அவனுக்கு முன்னைவிட அதிகமாக மதிப்பும் பக்தியும் ஏற்பட்டன. பூசப்கானிடம் அடைந்த தோல்வியினாலும் பட்ட காயத்தினாலும் புண்பட்டிருந்த நெஞ்சுக்கு அவன் பீஜப்பூர் படையிலே பதவி பெறாதது இதமாக இருந்தது. சித்திஹராஸனுடைய விரோதிகளின் பட்டியலிலே இப்போது அகமது நகரும் ஒன்றாகியது. சகோதரனைக் கொன்றதற்குக் கோல்கொண்டாவின் இப்ராஹிம் குதப்ஷாவையும், தன் முகத்தை விகாரமாக்கியதற்கு அகமதுநகர் ஹுஸைன் நிஜாம் ஷாவிடம் படைத் தலைமை பூண்டிருக்கும் பூசப்கானையும் பழி வாங்குவதென்று உறுதிபூண்டான் சித்திஹராஸன்.




ஒரு நாள் மன்னர் ஆதில்ஷாவிடமிருந்து அழைப்பு வந்தது சித்திஹராஸனுக்கு. அரண்மனைக்குப் போன போது அந்தரங்க ஆலோசனை மண்டபத்திலே அவர் அவனுக்காகக் காத்திருப்பதாக அறிந்து அங்கே விரைந்தான். சிந்தனை வடிவிலே சிலையாக வீற்றிருந்தார் ஆதில்ஷா அவர்கள். கவலையின் கீற்றுக்கள் கனத்துக் கிடந்தன அவர் முகத்தில்.

"அரசே! ஏன் இத்தனை வாட்டம்? தங்கள் நிலையைப் பார்க்கும் போது என்னை வரச் சொன்ன காரணம் சாதாரணமானதல்ல என்று நினைக்கிறேன்." சிந்தனையைக் கலைத்தான் சித்திஹராஸன்.

"நம்மை அமைதியாக வாழ விட மாட்டார்கள் போல் இருக்கிறது நம் அண்டை நாட்டுக்காரர்கள். தங்கள் தவறான முடிவுக்கு என்னையும் சாதகமாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள்" என்று கூறிச் சித்திஹராஸனிடம் நிலைமையை விளக்கினார் ஆதில்ஷா.

"அடிபட்டவர்கள் ஆத்திரப்படுகிறார்கள். அவமானமடைந்தவர்கள் ஆதங்கம் அடைகிறார்கள். பழி தீர்த்துக் கொள்ளப் பலம் தேடும் முயற்சியில் ஈடுபட்டுள்ள அவர்களுக்காக நாம் விஜயநகரத்தின் நட்பை முறித்துக் கொள்ளுவது விவேகமாகப்படவில்லை" என்றான் சேனாபதி.

"வேதனையாகவும் இருக்கிறது. ஆனால் இனத்தின் பெருமையைக் காக்க இஸ்லாத்தின் புனிதத்தைச் சொல்லி என்னை இணங்க வைக்கிறார்கள். என்ன செய்வதென்றே புரியவில்லை. மமதையும், மண்டைக் கனமும், இனவெறியும் பிடித்த மஹல்தார் ஒருவனை ராமராயனிடம் என் சார்பில் தூதாக அனுப்பினார்கள். எனக்கு அதில் விருப்பமே இல்லை. பெண்ணைக் கொடுத்தவரின் மனத்தைப் புண்படுத்த வேண்டாம் என்று பேசாதிருந்தேன். வாயடக்கமில்லாத அந்த முட்டாள் மஹல்தார், வன்மத்தை வளர்த்துக் கொண்டு

வந்து விட்டான். இவர்களோ அதையே காரணமாக்கி இஸ்லாத்தின் புனிதத்தைக் காக்கப் போர் தொடுத்தே ஆகவேண்டும் என்று துரிதமாக ஏற்பாடுகளைச் செய்து கொண்டு நானும் துணை நிற்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். இந்து சாம்ராஜ்யத்தோடு நான் இணக்கமாக இருப்பது இஸ்லாத்தின் பெருமையைக் குலைக்குமாம். ராமராயரின் நட்பு எனக்குப் பெருமையையோ புகழையோ கொடுக்காதாம்....''

சித்திஜானன் பயங்கரமாகச் சிரித்தான். ''அந்த இந்து சாம்ராஜ்யத்தின் நட்பை நாடி இவர்கள் ஓடினார்களே, அப்போது ? ராமராயரின் அன்பும் ஆதரவும் தங்களுக்குக் கிடைக்காதா என்று தவிப்புடன் தவம் கிடந்தார்களே அப்போது இஸ்லாத்தின் நினைவு இவர்களுக்கு இல்லையாமோ?'' என்று கேட்டான்.

''நடந்து போனதை யெல்லாம் மறந்து விடச் சொல்கிறார்கள். 'பாமினி புதிய பாதையில் அடியெடுத்து வைக்கிறது. நான்கு பாதுஷாக்களும்சேர்ந்து காபிர்களின் ஆதிக்கத்தை ஒழித்துக் கர்நாடகத்தை வெற்றிகொள்வோம்' என்று கதைக்கிறார்கள். இது வெறும் கனவு என்பது எனக்குத் தெரியும். ஆனால் இதைக் கூறி நான் இணங்க மறுத்தால் என்னை இனத் துரோகி, இஸ்லாத்தை மதிக்காதவன் என்று மதத்தின் பெயரால் ஒதுக்குவார்கள். அவர்களுடன் நம் நாட்டிலுள்ள உலேமாக்களும் இமாம்களும் ஒன்று சேருவார்கள். ஆகவே.....''

''விஜயநகரத்தைப் பகைத்துக் கொள்ள முடிவு செய்து விட்டீர்களா? தங்களைத் தன் மகனாக எண்ணி அன்பும் ஆதரவும் காட்டும் தந்தைக்கொப்பான ராமராயரைப் போர்க்களத்தில் விரோதியாகச் சந்திக்கப் போகிறீர்களா?'' என்று கவலையுடன் கேட்டான் சித்திஜானன்.



''பாமினித் தோழர்களுடன் பகைமையைத் தவிர்க்க அவர்களுக்குப் பக்கபலமாக இருப்பதாக ஒப்புக் கொண்டேனே தவிர அதனால் விஜயநகரத்துடன் விரோதியாக வேண்டும் என்பதில்லையே.''

புரியாமல் திகைத்தான் சித்திஜானன்.

மன்னர் தம் எண்ணத்தை அவனுக்குப் புரிய வைத்தார். ''நீ உடனே விஜயநகரத்துக்குச் சென்று என் தந்தைக்கொப்பான ராமராயரிடம் என் உண்மை உள்ளத்தை விளக்க வேண்டும். நான் சாம்ராஜ்யத்துக்கு எதிரான நடவடிக்கைகளில் பங்கு கொண்டிருப்பதாக ஒற்றர்கள் தூதுவர்கள் மூலம் அவருக்குத் தகவல்கள் கிடைத்தாலும் அது விரோதிகளின் வற்புறுத்தலின் பேரில் சூழ்நிலையின் காரணமான செயல்தான் என்றும் நடைமுறையில் நமது நட்பிலே எவ்வித மாறுபாடும் இல்லை என்பதை எடுத்துச் சொல்ல வேண்டும். இன்றே கிளம்பு'' என்று கூறி அவனை விஜயநகரத்துக்கு அனுப்பி வைத்தார்.

நள்ளிரவை எதிர்பார்த்து அலைபாய்ந்து கொண்டிருந்தது பூசப்கானின் மனம். காபிரிகளின் கோவிலிலே தன்னை எதிர்நோக்கியிருப்பது என்னவாக இருக்கும் என்று கற்பனை கூடச் செய்ய முடியவில்லை அவனால். அந்த மாயப் பெண்ணின் சங்கேத வார்த்தைகளின் மர்மத்தை அறிய வேண்டுமானால் அன்றிரவு வரை காத்திருக்கத்தான் வேண்டும். அது அதிர்ஷ்டத்தைக் கொடுக்குமா? அல்லது....? அபாயத்தையேகூட எதிர்பார்த்து அதையும் வரவேற்கத் தயாராகவே இருந்தான் அவன். அவள் குறிப்பிட்ட கோவில் நதிக் கரையில் எங்குள்ளது என்பதை அறிந்து கொள்ள அதிக சிரமம் இருக்கவில்லை. அவனுக்கு உதவியாக வந்திருந்த அவ்விருவருக்கும்தான் விஜயநகரத்தில் தெரியாத இடமே கிடையாதே.

மாலை மயங்கி இருள் கவியும் போதே தன் இருக்கையிலிருந்து கிளம்பி விட்டான் பூசப்கான். இதயத்திலே அடைத்து கிடக்கும் ஆவலைத் தாங்கிக் கொண்டு அவனால் தாமதிக்க முடியவில்லை. விஜயநகரத்திலே முஸ்லிம்களுக்காகவே அமைந்துள்ள குடியிருப்புப் பகுதிகளுக்குச் சென்று அவர்களின் மன நிலையை அறிந்து வருமாறு தன் பணியாளர் இருவரையும் அனுப்பி விட்டுத் தான் மட்டும் தனியாக நதிக் கரையை நோக்கிக் கிளம்பினான் குதிரை மீது. குறிப்பிட்ட பொழுதுக்கு இன்னும் வெகு நேரம் இருந்தது. அதை வீணாகக் கழிக்க விருப்பமில்லை. ஆவல் நிறைந்த கண்களோடு நகரின் பல பகுதிகளிலும் புகுந்து வரலானான். அவனது பார்வை ஒவ்வொரு காட்சியையும் அளவெடுத்துக் கொண்டிருந்தது. நகரின் ஒவ்வொரு மூலைமுடுக்குகளிலும் மக்கள் பெரும் போருக்கான ஆயத்தங்களில் ஈடுபட்டிருப்பதைக் கண்டான் அவன். பொழுது சாய்ந்து இருள் புகுந்த வேளையிலும்கூட உலைக்களங்கள் இரும்பை உருக்கி ஓட வைத்துக் கொண்டிருப்பதையும், வேல் வாள், ஈட்டி போன்ற போர்க் கருவிகளைச் சம்மட்டி கொண்டு ஆக்கிப் படைக்கும் ஆரவாரங்களும் அநுபவம் மிக்க அவன் கவனத்திலிருந்து தப்பவில்லை.

கருகருப்பான நகர்ப்புறத்திலிருந்து, நாலு படை வீடுகளைக் கொண்ட மூன்றாவது கோட்டைக்குள் குவிந்திருக்கும் எண்ணிறந்த படையணிகளைப் பார்த்துக் கொண்டே அமைதி நிறைந்த நதிக் கரைக்கு வந்த போது, அந்தப் பரந்த சாம்ராஜ்யத்தின் தலைநகர் பகல் உழைப்பின் அயர்வினால் ஏற்பட்ட ஆழ்ந்த உறக்கத்தில் அமிழ்ந்து போயிருந்தது. பின் நிலாக் காலமானதால் பிறை நிலவு கொள்ளை அழகுடன் குன்றுகளுக்குப் பின்னால் ஒளிந்தபடி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. அர்த்தஜாம பூஜைக்குப் பிறகு ஆரவமற்றுப் போயிருந்தது கோவில் பகுதி. மங்கிய நிலவொளியிலே நெடிதுயர்ந்த கோபுரங்கள் நிழலுருவாய் நின்றதோடு தரையிலே தங்கள் நீண்ட நிழல்களையும் படிய விட்டுக் கொண்டிருந்தன. அந்த இருள் படிந்த பகுதியில்தான் தேடி வந்த மர்மம் எங்காவது மறைந்திருக்கிறதோ என்ற பதைப்போடு பார்வையை அலைய விட்டுக் கொண்டு வந்தவன் குதிரையிலிருந்து கீழிறங்கி அதை நிழல் செறிந்த ஆலமரத்தின் விழுதிலே கட்டிவிட்டு விழிகளை விசாலமாக்கிக் கொண்டு மெல்ல நடக்கலானான். இருளுக்கும், இரவு நேரத்துக்கும், மேற்கொண்டிருக்கும் காரியத்துக்கும் தக்கபடி அவன் உடையணிந்திருந்தான். தலைப்பாகையோடு சேர்ந்ததொரு அங்கி, தோள் மீது புரண்டு உடலையே மூடி மறைக்கும்படியாக வழிந்து கிடந்தது.

அந்த நிசப்தமான இரவிலே நிலவு மேகங்களிடையே மறைந்தும் தோன்றியும் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தது. உறங்கும் நகர் நங்கையின் உயிர் மூச்சைப் போல, சவுக்குத் தோப்பினுள் புகுந்து ஓடும் காற்றின் ஓலத்தைத் தவிர அந்த ஆழ்ந்த அமைதியான இரவிலே வேறு அரவமே இல்லை. மங்கிய நிலவொளியிலே மூழ்கிக் குளித்து ஓடவிட்ட நிழலிலே ஓங்கி உயர்ந்து நின்ற தன் உடலுக்கு இருள் ஆடை புனைந்து அந்தப் புதியவனுக்கு ஒரு புதிராக நின்று கொண்டிருந்தது அந்தக் கோவில். மண்டபத்திலும், மதில் சுவரிலும், கோபுரங்களின் மீதும் கண் இமைக்காமல் அவனைப் பார்த்து நின்ற கற்சிலைகளோ அந்த மௌனத்தின் பயங்கரத்தை அதிகமாக்கிக் கொண்டிருந்தன. தூரத்திலே பரந்து குடை பரப்பி வளர்ந்திருந்த பெரிய ஆலமரத்தின் விழுதுகள் பாம்புகளைப் போலப் பார்வைக்குப் பீதியூட்டிக் கொண்டிருந்தன.

நான் இங்கு ஏன் எதற்காக இப்படி வந்து உட்கார்ந்திருக்க வேண்டும் என்ற காரணம் புரியாமலே காத்துக் கிடந்தான் பூசப்கான். என்ன நிகழப் போகிறது என்பதைப் பற்றி அவனுக்கே விளங்காத எதையோ எதிர்பார்த்திருந்த அவன் தனது கண்களையும் காதுகளையும் கூர்மையாக்கிக் கொண்டான். வெகு நேரம் வரை எதுவுமே நிகழவில்லை. ஏமாற்றம் எரிச்சலாகும் தருணத்தில் ஏதோ ஒரு ஒலி அவன் உடலைச் சிலிர்க்க வைத்தது. அதே சமயத்தில் பூசப்கானின் குதிரையும்கூட ஏதோ அரவம் கேட்ட உணர்விலே கனைத்து அந்த மௌனச் சூழ்நிலையிலே சலனத்தை உண்டாக்கியது.

இருள் கப்பிக் கிடந்த சிலை மண்டபத்தின் படிகளிலே சாய்ந்து அமர்ந்திருந்தவனை நிமிர்ந்து உட்கார வைத்தது தூரத்திலே தெரிந்த அந்த ஒளி. இருளினால் விழுங்கப்பட்டு அணைந்தும் அணையாமலும் மண்டபத்தின் ஏதோ ஒரு பகுதியில் ஒரு விளக்கு வெகு நேரமாகவே மினுக்கிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அந்தச் சுடர்தானா இது? நடுங்காமல் சீராக ஒளிர்ந்த அதுவா இப்படி....? சுடர் நகர்ந்தது. வளர்ந்தது. இவனை நோக்கியும் வந்தது. இமைகளைச் சுருக்கி இருளிலே தோன்றிய அந்த ஒளியை இனங் கண்டு கொள்ள உற்று நோக்கினான். பல சுடர்களாகப் பரவி ஒளிக் கற்றைகளை உமிழ்ந்து கொண்டிருந்த பந்தத்தை ஒரு பளிங்குக் கரம் பற்றிக் கொண்டிருப்பது

"ப்ரின்ஸ் பிளேடு
சிறகைப்
போன்ற
மென்மை தரும்
பிளேடு"

கரடுமுரடான தாடியுடைய ஒருவர் சொல்வதைக் கேளுங்கள்—ப்ரின்ஸ் பிளேடினால் க்ஷவரம் செய்து கொள்வது ஒரு சிறகை உபயோகிப்பது போன்றதாகும்! அவ்வளவு மழமழப்பானது...அவ்வளவு சுத்தமானது... அவ்வளவு இதமானது...உங்கள் ரேஸர் மயிர்க்கால்களினூடே சென்று, அந்தப் பரவசமான தூய்மையின் உணர்வை உங்களுக்குத் தருகிறது— ப்ரின்ஸ் பிளேடின் விசேஷ ப்ளூரோ கார்பன் ஓரம் தான் இதற்குக் காரணம்.

மேலும், ப்ரின்ஸ் பிளேடினால் அதிகமான க்ஷவரங்கள் செய்து கொள்ளலாம். இந்த, மேலும் மேலும் அதிகமான மனிதர்கள் ப்ரின்ஸ் பிளேட் உபயோகிக்கின்றனர்...நீங்கள் இதுவரை மாற்றிக்கொள்ளவில்லையானால், உடனே ப்ரின்ஸ் பிளேடு உபயோகிக்க ஆரம்பியுங்கள்.




**ப்ரின்ஸ் பிளேடு**



ப்ளூரோ கார்பன் ஓரம் கொண்டது

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: முல்லர் & ஃபிப்ஸ் (இந்தியா) ப்ரைவேட் லிமிடெட்

நெருக்கமான நெசவு. நீடித்த உழைப்பு.
பூர்த்தியழகு எல்லாவற்றிலும்

# கோத்தாரி மல்கள்

## மேம்பட்டவை

**லாங்கிளாத்துகளுங் கூட!**

...ஏனென்றால்

- கோத்தாரி மல்கள், லாங்கிளாத்துகளை தயாரிக்க பயன்படும் நூல் உயர்ந்தரகக் கோத்தாரி நூலாகும்.
- சுயமாக இயங்கும் விசைத்தறியில் நூலிழைகள் நெருக்கமாக நெய்யப்படுகின்றன.

எப்பொழுதும் கோத்தாரி மல் எம். 7 என்றும் லாங்கிளாத் எல். 1 அல்லது எல். 2 என்றும் பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள்.

இந்த டிரேட் மார்க்கையும் கவனியுங்கள்







தயாரிப்பாளர்கள்:
**கோத்தாரி டெக்ஸ்டைல்ஸ் லிமிடெட்**

இக்கால்லூர், கோயமுத்தூர்

மானேஜிங் ஏஜண்டுகள்:
**கோத்தாரி & ஸன்ஸ்**
ஓரியண்டல் பில்டிங்ஸ்,
அரமனைக்காரத் தெரு
சென்னை-1.

தெரிந்ததா? அந்தக் கரத்தின் அழகையே கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த பூசப்கான் அந்தக் கரத்துக்கு உரிய உருவம் தன் அருகே வந்ததும், பந்தம் உமிழ்ந்த ஒளியில் அதன் ஒப்பற்ற அழகைக் கண்டதும் அதிசயத்தினால் திகைத்துத் திக்குமுக்காடிப் போனான். அவள்.... அன்று பகல் அந்தப் புரத்திலே கண்ட அழகு மங்கையேதான்! அவள் — ஆயிஷா!

கரு நீலத் துகிலினால் தலையிலிருந்து கால் வரை உடலை மூடி மறைத்துப் போர்த்தியபடி பதுமையாக வந்து நின்றாள் அந்தப் பெண்ணழகி: நீல வானத்திலே மிதக்கும் முழு நிலாவாக மதிமுகம் மட்டும் ஒளிர்ந்துகொண்டிருந்தது. சிரித்துப் பேசிய சிங்கார விழிகளோ நிலத்தை நோக்கித் தாழ்ந்திருந்தன. தான் எதிர்பார்த்த அதிசயம் — பரிசு — அவளாகவே இருக்கும் என்று அவன் எதிர்பார்க்கவே இல்லை. அந்தப்புரத்திலே அவள் அழகைக் கண்டு வியந்தவன் இப்போது இந்த நள்ளிரவில் தன்னந் தனியே தன்னைச் சந்திக்க வந்திருக்கும் அவள் துணிவை எண்ணி வியந்து கொண்டிருந்தான். அவளது குனிந்த தலை நிமிர்ந்த போது அவள் கண்கள் குளமாகி இருந்தன. உதடுகள் துடித்தன: வியப்பிலே மிதந்தவாறு அவளையே விழுங்கிக் கொண்டிருந்தவன் அவள் பேசத் துடிக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டான். ஆனால் அந்தப் புரத்திலே இந்து மூதாட்டியின் முன்னிலையிலே சரளமாகப் பேசிய அவளால், இப்போது தனிமையில் அவனுடன் பேசுவதற்கு ஏனோ வார்த்தைகளே கிடைக்கவில்லை. இந்தப் பேச்சற்ற நிலையிலேயே ஒருவரை ஒருவர் பார்த்தபடி வெகு நேரம் நின்று கொண்டிருந்தார்கள். பிறகு...?

தீச்சுடரைத் தாங்கி நின்ற ஆயிஷாவின் கரம் நடுங்கிய போது தன் நிலை அடைந்த பூசப்கான் விரைந்து சென்று அவளிடமிருந்து அதை வாங்கிக் கொண்டான். நிழல் படிந்த கோயில் மண்டபத்துச் சூழலிலிருந்து மணல் செறிந்த ஆற்றங்கரையை நோக்கி நடக்கலானார்கள். கையில் இருந்த தீவர்த்தியை ஓரிடத்தில் மணலில் பதித்து நிறுத்தினான் பூசப்கான். அதன் அருகே தென்றலிடைக் கொடியெனத் துவண்டு நின்றாள் அந்தத் துருக்கிய அழகி. போர்த்தியிருந்த கருநீலத் துகில் நழுவித் தரையில் விழுந்த போது மடல் அவிழ்ந்த மலரைப் போல, சிப்பியிலிருந்து வெளிப்பட்ட நல்முத்துப் போல, உறையிலிருந்து உருவிய வாளைப் போலத் துவளும் கையிரண்டையும் கோர்த்து முன்னால் தொங்கவிட்டபடி அழகு ஒளிர ஓவியமாக நின்றாள் ஆயிஷா: உடல் எது, உடை எது என்று மயங்கும்படியான ரோஜா இதழ் வண்ணத்தில் கருநீலத் துகிலுக்கு உள்ளாக ஆடை அணிந்திருந்தாள் ஆயிஷா: சரிகை வேலைப்பாடு செய்த அந்தச் சல்லாத் துணி தலை மீதாக வந்து அந்தச் சுந்தர வதனத்தின் அழகை மூடி மறைக்க முயன்று தோல்வி கண்ட சோகத்திலே சுருண்டு கிடந்தது: விண்ணகத்து மங்கை யொருத்தி மண்ணகத்துக்கு வந்து இறங்கியதைப் போல நாணம் சூழ நின்றாள் அவள்:

"ஐயா! இந்த வேளையில் தனியாக ஓர் அந்நிய ஆடவனைச் சந்திக்க வந்துள்ள என்னைப் பற்றித் தாங்கள் கேவலமாக நினைக்கலாம்: முஸ்லிம் இனத்தவளான என் மீது இந்தச் செயலுக்காகத் தாங்கள் கோபமும் கொள்ளலாம். ஆனால் என் சோகக் கதையைக் கேட்டால்...." சொல்லை மீறிய அழுகை அவளை ஆட்கொண்டது.

வியப்பிலிருந்து விடுபட்டுக் கொண்டிருந்த பூசப்கான் பேசினான். "அதிர்ஷ்டத்தை நாடி என்னை இங்கு போகச் சொல்லி அந்த அதிர்ஷ்டமாக என்னைத் தேடி நீயே வருவாய் என்று நான் எதிர்பார்க்கவில்லைதான்...."

"என்னை அதிர்ஷ்டமென்று வர்ணிக்கிறீர்கள்? துரதிர்ஷ்டம் பிடித்தவளப்பா நான்! என் பெற்றோர்களின் மரணத்துக்குக் காரணமான மன்னவனைப் பழி வாங்க வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக உயிர் வாழ்ந்து வருகிறேன்" என்ற போது தீயாக ஜ்வலித்தாள் ஆயிஷா. அவளிடம் தோன்றிய திடீர் மாற்றத்தைக் கண்டு திடுக்கிட்டான் பூசப்கான். அவளிடம் தன் சோகக் கதையைச் சுருக்கமாக ஆனால் உருக்கமாக விவரித்தாள்.

"இப்போது சொல்லுங்கள். கற்சிலையை வணங்கும் கல் மனம் கொண்ட இந்தக் கொடியவர்களிடம் இப்படிக் கைதியாக, அடிமையாக, அவல வாழ்வு வாழும் நான் என் இனத்தவரும் என் இனிய தாய்மொழி பேசுபவருமான உங்களைச் சந்திக்க வந்தது குற்றமானால் என்னை இங்கேயே கொன்று போட்டு விட்டுச் செல்லுங்கள். அங்கே வாழ்ந்து கொண்டே சாவதைவிட இது எவ்வளவோ மேல். என்னுடைய இந்தத் துணிச்சலான செயல் மன்னிக்கத் தக்கதானால் இந்தச் சிறையிலிருந்து நான் விடுதலை பெற, இங்கிருந்து தப்பிச் செல்ல எனக்கு உதவுங்கள்: என் தாய்நாட்டுக்கு இல்லாவிட்டாலும், புனிதமான இஸ்லாத்துக்கு ஏற்றமளித்து, அல்லாஹ்வின் அரசாட்சி எங்கே நடக்கிறதோ அந்த நாட்டுக்குச் சென்று வாழ எனக்கு உதவுங்கள்" பூசப்கானைச் சிலையாக்கிச் சிந்திக்க விட்டுச் சீறிப் பாயும் சிறுத்தையைப் போலத் தன் உள்ளத்து உணர்ச்சிகளை வார்த்தைகளாக்கிக் கொட்டினாள் அதிசயப் பெண் ஆயிஷா.

அவள் அழகைக் கண்டு பிரமித்தவன், துணிவைக் கண்டு திகைத்தவன் இப்போது, வாதத் திறன் கொண்ட அவள் பேச்சைக் கேட்டு வியந்து போனான்: "ஆயிஷா! இதயம் படைத்தவன், இனப்பற்று மிகுந்தவன் யாருமே உன் சோகக் கதையைக் கேட்ட பின் உன்னைக் குற்றவாளியாகக் கருத மாட்டான். இந்தச் சூழ்நிலையில் இப்படி நீ வாழ்வதை அல்லாஹ் சகிக்கவே மாட்டார்: ஆகவே....."

அதற்கு மேல் அவனைப் பேச விடவில்லை ஆயிஷா: "அப்படியானால்.....அப்படியானால்! நான் தப்பிச் செல்ல உதவுங்கள்: உதவுவீர்களல்லவா?" என்று கேட்டாள் தவிப்போடு.

சிந்தனையில் ஆழ்ந்து போன பூசப்கான், பலமிழந்து கொண்டிருந்த பந்தத்தை மணலில் புதைத்து அணைத்து விட்டு அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்:

"என்ன யோசிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் ஆயிஷா. "வாக்குக் கொடுத்து விட்டு வம்பில் மாட்டிக் கொள்ளுவானேன் என்று?"

"அதில்லை. நானோ அந்நியன். அதிலும் வியாபாரி. என்னிடம் உனக்கு இத்தனை நம்பிக்கை எப்படி வந்தது என்று எண்ணிப் பார்க்கிறேன். முஸ்லிம் இனத்தைச் சேர்ந்தவர்கள் இந்த விஜயநகரத்திலும் அரண்மனையிலும் எத்தனையோ பேர் இருக்கிறார்களே. இந்த எண்ணத்தைச் செயலாக்க அவர்களில் யாரையுமே நீ நாடவில்லையா?"

"கல்லுருவங்களைக் கடவுளாக வணங்கும் மன்னரும் மக்களும் வாழும் இந்த நகரத்திலே உள்ள முஸ்லிம்கள் வயிற்றுப் பிழைப்புக்காகத் தங்கள் வீரத்தையும் ஏன், தன்மானத்தையுமே விலை பேசி வாழுபவர்கள். அவர்களால் என் எண்ணம் ஈடேற மார்க்கமே கிடையாது. அதுவும் தவிர..." என்றவள் அவனைத் தன் பார்வையால் அளந்தபோது அதரங்களிலே சிரிப்புச் சுழித்து நின்றது.

அந்தப் பார்வையின் குத்தலை, சிரிப்பின் குறுகுறுப்பைத் தாங்க முடியாத பூசப்கான், அவளையே பேசும்படி வைக்கிறான்.

"இங்கு வாழ்பவர்கள் இந்த மன்னரிடம் சேவகம் செய்பவர்கள். அவருடைய உப்புக்குத் துரோகம் இழைக்க மாட்டார்கள்."

"அப்படியானால் என்னை இந்நாட்டின் விரோதி, துரோகி என்று வர்ணிக்கிறாயாக்கும்? வம்புதான் போ!" என்றான் பூசப்கான் விளையாட்டாக.

"ஏன் பயமாக இருக்கிறதா வீரரே! என்று விவரிக்க இயலாததொரு பார்வையை அவன் மீது வீசினாள். "எனக்கு மட்டுமல்ல, அடிமைப்பட்டுக் கிடக்கும் முஸ்லிம் அரசுகளின் விடுதலைக்காகவே இந்த வயோதிக வியாபாரி வேஷத்தோடு வந்திருக்கும் வீரர், வேவுகாரர் நீங்கள்!"

தூக்கிவாரிப் போட்டது பூசப்கானுக்கு.

"என்னம்மா, ஏதேதோ பெரிய பெரிய வார்த்தைகளாகச் சொல்லி என்னைக் குழப்புகிறாயே?"

அவன் தவிப்பைக் கண்டு பொங்கி வரும் தன் சிரிப்பை அடக்கிக் கொண்டாள் ஆயிஷா. ஆனால் அந்த மகிழ்ச்சி அத்தனையும் அவள் முகத்தில் மந்தகாசமிட்டிருந்தது.

"என் வார்த்தைகள் பெரிதல்ல; தாங்கள் வந்திருக்கும் காரியம்தான் பெரிது. வேஷம் போட்டவருக்கு அநுபவம் போதாது என்பதைத் தவிர அதில் விபரீதம் ஏதுமில்லை. ஏன் திகைக்கிறீர்கள்? கிழவன் வாலிபனாக வேஷம் போடலாம். ஆனால் இளமையான முகத்திலே முதுமையை ஒட்ட வைக்கும் போது சற்று அதிகக் கவனம் செலுத்த வேண்டும். குரலிலாவது கொஞ்சம் நடுக்கத்தைக் கூட்டிக் கொள்ள வேண்டாமா?" என்று குலுங்கச் சிரித்தாள். தன் குட்டு வெளிப்பட்டு விட்டதை எண்ணிப் பரிதாபமாக விழித்தான் பூசப்கான்.

"அரசியின் பார்வைக்கு ஆபரணங்களை விலை பேசக் கொண்டு வந்தீர்களே, அவைகளில் பலவற்றில் கோல்கொண்டா குதுப்ஷாவின் அரச முத்திரையும், அகமதுநகர் நிஜாம் ஷாவின் அரசாங்க அடையாளங்களும் இருப்பதைக் கண்டேன். இன்று நான் இந்த மன்னரின் அந்தப்புரத்து அடிமையாக இருந்தாலும், என் தகப்பனார் ஒரு கோட்டையின் அதிபதியாக இருந்தவர். ஆகவே எனக்கு இந்த அரசியல் முத்திரைகளைப் பற்றி எல்லாம் தெரியும். அகமது நகரும் கோல்கொண்டாவும் சமீபத்தில் விஜயநகரத்திடம் தோல்வியடைந்து அவமானப்பட்டுள்ள விஷயத்தையும் உங்கள் வேஷத்தையும் ஒப்பிட்ட போது உங்களுக்குள்ளே ஒளிந்திருக்கும் உண்மை பளிச்சிட்டது. ஆனால் தங்கள் உடைவாளோ பீஜப்பூர் ஆதில்ஷாவின் ராஜ சின்னத்தைக் கொண்டிருந்தது. அவரோ ராமராயரின் அன்புக்குப் பாத்திரமானவர். உங்களைப் பற்றிய என் முடிவிலே இந்த ஒரு விஷயம் நெருடலாயிற்று. எப்படியோ ஆதில்ஷாவின் ஆதரவையும், அவரது பாராட்டாக இந்தப் பட்டாக் கத்தியையும் பெற்றிருக்கிறீர்கள் என்று முடிவுக்கு வந்தேன். நான் சொல்வது சரிதானே?" என்று கேட்டாள் ஆயிஷா.

தன் அந்தரங்கத்தை எல்லாம் அத்தனை அப்பட்டமாக அருகிருந்து திட்டமிட்டு அனுப்பியவளைப் போல விவரித்ததைக் கேட்ட பூசப்கானுக்குப் பேச வார்த்தைகளே கிடைக்கவில்லை. "சற்று முன்பு என்னிடம் ஏதோ உதவி கேட்டீர்கள். ஆனால் இப்போது அதை நானே தங்களிடம் கேட்க வேண்டியவளாக

இருக்கிறேன்: என் ரகசியங்கள் அத்தனையையும் அறிந்த உங்கள் கையில்தான் என் வாழ்வு இருக்கிறது. இங்கு இத்தனை திறமைவாய்ந்த தொரு பார்வைக்கு இலக்காக வேண்டியிருக்கும் என்று தெரிந்திருக்குமானால் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்திருப்பேன். ஆனாலும்கூட உங்கள் முன்னிலையில் எனக்குத் தோல்விதான் ஏற்பட்டிருக்கும். அதில் சந்தேகமே இல்லை. இந்த நிலையிலும் மனத்துக்கு மகிழ்ச்சியளிக்கும் விஷயம், நான் வந்திருக்கும் காரியத்துக்குத் தங்கள் உதவி எனக்குக் கிடைக்கும் என்பதுதான். விரைவிலேயே பாமினி சுல்தான்களின் படைகள் இந்த விஜய நகரத்தை வெற்றி கொள்ள முற்றுகையிடப் போகின்றன. அதற்கான சில அரசியல் ரகசியங்களை அறிந்து வரவே என்னை அனுப்பியிருக்கிறார்கள். அந்த என் முயற்சி வெற்றி பெறுமானால்......" ஆதுரத்தோடு அவளைப் பார்த்தான் யூசப்கான்.

இது வரை எந்தப் பார்வைக்கும் குனியாத அவள் தலை குனிந்தது. பரபரப்புடன் எழுந்திருந்தாள். "நான் வந்து வெகுநேரமாகி விட்டது. உதவி கேட்க மட்டும் நான் வரவில்லை. என் உதவியும் உங்களுக்குத் தேவைப்படும் என்று உணர்ந்தேதான் இங்கு வந்தேன். இதுவரை ஏற்படாத ஏதோ ஒரு வேகம் உங்களைப் பார்த்தவுடன் என்னுள் தோன்றியது. அது இத்தனை துணிவையும் எனக்கு உண்டாக்கியதை எண்ணினாலும் வியப்பாகவே இருக்கிறது. நாளை மறுபடியும் சந்திப்போம். இப்போது எனக்கு விடை கொடுங்கள்" என்று எழுந்திருந்தாள்.

கீழே சரிந்து கிடந்த சால்வையை எடுத்து அவள் தன் உடலைப் போர்த்தி மூடிக்கொள்ள உதவினான் யூசப்கான். "உங்களுக்கு ஆட்சேபனை இல்லையானால் என் குதிரையிலேயே உங்களை..." என்று கூறிய அவனை மோகனமாகப் பார்த்து முறுவலித்தாள் ஆயிஷா.

"என் குதிரையும்கூட அதோ அந்த மண்டபத்துக்குப் பின்னால் என் வரவுக்காகக் காத்திருக்கிறது" என்று கூறி வேகமாக நடந்தாள் அவள். அவளது நடையழகை ரசித்தபடியே அவளைத் தொடர்ந்தான் யூசப்கான்.

இரண்டு குதிரைகள் அருகருகே செல்வதையும் இடையிடையே எழும் சிரிப்பொலியையும் ஆலமரத்தின் விழுதுகளுக்கிடையிலே மறைந்திருந்தபடி விஜயநகரத்து வீரன் ஒருவன் இமைக்காத விழிகளால் விழுங்கிக் கொண்டிருந்தான்.

மறு நாள் காலை ஆயிஷா துயில் கலைந்து கண் விழித்த போது முதல் நாளிரவு நிகழ்ச்சிகளின் நினைவிலே உள்ளம் துள்ளிடப் புதிய சோபையுடன் விளங்கினாள். நீராடும் துறையிலே அவள் துளைந்து விளையாடியதையும் அதன் பிறகு நந்தவனத்திலே அவள் பறவைகளை விரட்டிக் கொண்டு ஓடியதையும் கண்டவர்கள் ஆயிஷாவை ஒரு மாதிரியாகத்தான் பார்த்தார்கள். அத்தனை குதூகலமாக அவளை அது வரை யாருமே பார்த்ததில்லை.

தேவியார் அழைப்பதாகச் செய்தி வந்தது: அங்கே போன போது தேவி திருமலாம்பா மட்டுமில்லை: ஈட்டி ஏந்திய இரண்டு வீரர்களும் இருந்தார்கள்: அமைச்சர் திருமலை ராயர் உன்னை உடனே இவர்களுடன் அனுப்பி வைக்கும்படி ஓலை கொடுத்தனுப்பியுள்ளார் அம்மா. அதற்காகத்தான் கூப்பிட்டனுப்பினேன்..." என்றாள் ராமராயரின் தர்மபத்தினி.

"எதற்காகவாம்....?" எங்கோ கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போலிருந்தது குரல்.

"யார் கண்டார்கள்? நேற்று வந்திருந்தாரே ஒரு வியாபாரி, அவரோடு பேசுவதற்காக இருக்கலாம்" என்று சகஜமாகக் கூறினாள் திருமலாம்பா. அமைச்சர் திருமலை ராயருக்கு அராபிய மொழியைப் புரிந்து கொள்ளுவதற்குத் துபாஷி தேவையில்லை என்ற உண்மை ஆயிஷாவுக்குத் தெரியும். ஆனால் அதைக் கூறி விவாதிக்க விரும்பவில்லை அவள். உடன்பிறந்த அந்தத் துணிச்சல் வந்து ஒட்டிக் கொள்ளவே, உள்ளத்திலே உறுதியை வளர்த்துக் கொண்டு அவர்களுடன் கிளம்பி விட்டாள்.

திருமலாம்பா தேவியின் அரண்மனை வாயிலைக் கடக்கும் போது எதிரில் வேங்கடாத்திரி வந்து கொண்டிருந்தான். தற்செயலாக வந்தாரோ அல்லது அண்ணனின் உத்தரவை அறிந்துதான் வந்தாரோ தெரியாது. ஆயிஷாவின் அருகில் வந்து குதிரையிலிருந்து கீழே இறங்கினான். அவனைக் கண்டதும் அவள் வாய் அவளையும்மீறி, "அண்ணா!" என்றழைத்தது. அவள் கண்கள் கலங்கின.

"இந்தப் பெண்ணை எங்கே அழைத்துப் போகிறீர்கள் ?" என்று கேட்டான் அந்த வீரர்களிடம் வேங்கடாத்திரி.

"அமைச்சர் திருமலைராயர் அழைத்து வரும்படி கட்டளை பிறப்பித்தார்கள்" என்றான் வாய் புதைத்து, உடல் ஒடுங்க ஓடி வந்து நின்ற ஒருவன்.

"ஓ......!" என்றவன் சில விநாடிகள் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு சட்டென்று, "மகாமண்டலேசுவரர் ராமராயர் வேங்கட விலாச மண்டபத்திலே, பீஜப்பூரிலிருந்து வந்திருக்கும் தூதுவனிடம் உரையாடிக் கொண்டிருக்கிறார். அவர்களுடைய தேவைகளைக் கவனிப்பதற்கு அநுபவம் மிக்க பணிப் பெண்ணான ஆயிஷாவை அங்கு அனுப்பும்படி என்னிடம் கூறினார். அதற்காகவே நான் வந்து கொண்டிருக்கிறேன். அமைச்சருக்கு அது தெரியாதுபோல் இருக்கிறது. போகட்டும். நான் அவரிடம் விஷயத்தைக் கூறி விடுகிறேன். நீங்கள் இந்தப் பெண்ணை வேங்கடவிலாச மண்டபத்துக்கு அழைத்துச் செல்லுங்கள்" என்று உத்தரவு பிறப்பித்து, ஆயிஷாவைப் பொருள் பொதிந்த பார்வையால் எச்சரித்து விட்டுச் சரேலென்று குதிரை மீதேறி உட்கார்ந்தான். திருமலையிடம் போக வேண்டிய ஆயிஷாவை ராமராயரிடம் திருப்பி விட்ட திருப்தியுடன் வேகமாகக் குதிரையை விரட்டிக் கொண்டு மறைந்தான் வேங்கடாத்திரி. அவன் போவதையே நீர்த் திரையிட்ட கண்களால் பார்த்துக்கொண்டு நின்ற ஆயிஷாவை வீரர்கள் வேங்கட விலாச மண்டபத்துக்கு அழைத்துப் போனார்கள்: (தொடரும்)







1. சென்னை தியோஸாஃபிகல் உயர் நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியராகச் சிறப்புறப் பணியாற்றும் திரு பாலகிருஷ்ண ஜோஷி, ராஷ்டிரபதி பரிசைப் பெறுகிறார். 2. கால்கேட் பாமாலிவ் ஸ்தாபனத்தார் அண்மையில் நடத்திய புகைப்படப் பரிசுப் போட்டியின் நீதிபதிகள். 3. மேற்கு மாம்பலம் சங்கர மடத்தில் தொடர்ந்து சௌந்தர்யலஹரி உபன்யாசங்களைச் செய்த ஸ்ரீ ஸோமதேவ சர்மாவுக்குப் பாராட்டு விழா நடந்தது. 4. தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பன்னிரண்டாம் மகாநாட்டில் திரு ராய. சொக்கலிங்கத்துக்கும் திரு நாரணதுரைக்கண்ணனுக்கும் நீதிபதி திரு அனந்த நாராயணன் கேடயங்கள் வழங்குகிறார். 5. இந்திய மலேஷிய நட்புறவுச் சங்கத்தின் கூட்டத்தில் ராஜாஜி.

# சிரிக்கவும் சிந்திக்கவும்

“சர்க்கார் சேமித்து வைக்கும் நாணயங்கள் எல்லாம் எங்கேதான் போகின்றன? மந்திரிகளின் பெண்கள், பிள்ளைகளின் கல்யாணங்களுக்காக ஒதுக்கி வைத்துக் கொண்டிருக்கிறார்களா?”

—ஸ்ரீ என். ஜி. ரங்கா லோக சபையில்

ஃ ஃ ஃ

“அரிசிப் பஞ்சத்தை ஆனந்தமாக அனுபவிப்பது எப்படி?”

இதற்கு நான் ஒரு வழி கண்டுபிடித்திருக்கிறேன். வாரத்துக்கு ஒரு நபருக்கு ஒரு லிட்டர் அரிசி மட்டுமே அரசாங்கம் கொடுக்கிறது என்பதை முதலில் அடியோடு மறந்து விட வேண்டும். கியூ வரிசையில் நிற்பதால் கால்கள் வலிவுறுகின்றன, வெய்யில், மழை, காற்று, குளிர் இவற்றை யெல்லாம் தாங்கிக் கொள்வதற்கான உடற்பயிற்சி ஏற்பட்டு வருகிறதென்றும் நினைத்துக் கொள்ள வேண்டும்.



இந்த மனநிலையுடன் ஒரு லிட்டர் அரிசியை மேஜையின் மீதோ, தரையிலோ வைத்துக் கொள்ளுங்கள். அதைப் பதினைந்து பாகமாகப் பிரியுங்கள். ஒரு பாகம் ஒரு வேளைக்கான அரிசியைக் குறிக்கிறது.

இந்தப் பாகத்தை மட்டும் தனியே ஒதுக்கி வைத்துக் கொண்டு அதை நன்றாகப் பரப்புங்கள். பிறகு ஒவ்வொன்றாக எண்ண ஆரம்பியுங்கள். நான் எண்ணிப் பார்த்ததில் 963 முழு அரிசி, 43 முக்கால் அரிசி, 318 அரை அரிசி, 324 கால் அரிசி, 23 கற்களும் இருந்தன. மொத்தம் 1666 ஆகின்றன. ஒரு கணவனுக்கும் மனைவிக்குமாகச் சுமார் 3750 அரிசிகள் கிடைக்கின்றன. இதை ஒரு பெரிய டம்ளரில் போட்டே அடுப்பில் வைத்துச் சாதமாக்கலாம். இப்படிச் செய்வதில் நாம் ‘ஆயிரக் கணக்கில்’ சாப்பிடுவது போன்ற பிரமை ஏற்படும். அரிசிகளைச் சிறுவர்களை விட்டு எண்ணச் சொல்லி, வருத்தல் கணக்குச் சொல்லிக் கொடுக்கலாம்.



ஒரு நண்பரிடம் இந்த யோசனையைத் தெரிவித்தபோது அவர் என்னைப் பாராட்டினார். அப்போதே எனக்குப் ‘பாரத ரத்னம்’ பட்டம் அளிக்கத் தமக்கு அதிகாரமில்லையே என்று வருத்தப்பட்டு விட்டு இன்னும் ஓர் அபூர்வமான யோசனை கூறினார். “அரிசியைக் கழுவி சிறிது நேரம் வைத்திருந்து விட்டுப் போட்டு வடித்தால் சாதம் ஒவ்வொன்றாக, தனித் தனியாக இருக்கும்; அதை நாமும்



ஒவ்வொன்றாகக் குண்டூசியில் குத்திக் குத்தித் தின்னலாம்” என்றார்.

‘லஞ்ச மகா சாஸ்திரம்’ என்ற ஒரு பெரிய நூல் எழுதக் கூடிய அளவுக்கு லஞ்சம் நமது தேசத்தில் பரிபக்குவமடைந்து விட்டிருக்கிறது. இனாம், பக்ஷீஸ், சில்லறை, ‘டிப்ஸ்’, மாமூல், ‘லைஸ்’, கிம்பளம், இலஞ்சம், பெரிய இடத்து லஞ்சம் என்ற அதன் பல அம்சங்களைப் பற்றிய அபிப்பிராயங்கள் வெளியாகி வருகின்றன.

‘டிப்ஸ்’ என்றால் என்ன? போக்குவரத்து இலாகாவில் ஒரு சிப்பந்தி இருக்கிறான். பழங்கள் அடங்கிய பார்சல் கூடைகள் இருக்கின்றன. பழங்கள் அழுகிப் போவதற்கு முன்னால் ஒரு குறிப்பிட்ட பார்சலை, அதற்குரியவருக்குக் கொடுத்து விடுகிறான். அதற்காக அவர் பணம் கொடுத்தால் அது ‘டிப்ஸ்’. அதை இலஞ்சம் என்று சொல்வதற்கில்லை. யூனியன் உள்நாட்டு மந்திரி ஸ்ரீ நந்தா இப்படி அழகாக வியாக்கியானம் செய்திருக்கிறார்!

இலஞ்சம் என்றால் என்ன, அது முதன் முதலில் எந்த யுகத்தில், எந்த வருஷத்தில், எந்தத் தேதியில் யாரால் வாங்கப்பட்டது; எந்தெந்தத் தேசத்தில் எந்தெந்த முறையில் வாங்கப்படுகிறது; இந்தியாவில் இன்றும் பற்றப்படாத இலஞ்ச வகைகள் என்பதைப் பற்றி எல்லாம் நான் ஆராய்ச்சி செய்திருக்கிறேன். தகவல்கள் வேண்டுவோர் எனக்கு என்ன கொடுப்பார்கள்? இ...ல...ஞ்...ச...ம்!

இலஞ்ச நாமிதாவில் வருபவற்றுள்ள ‘டிப்ஸ்’ என்றால் எனக்கு மிகவும் பயம். இத்தனைக்கும் அது அதிகமான தொகை இல்லை. உயர்தரமான ஹோட்டல்களில் வெள்ளைப் பாண்ட் உடுத்து, வெள்ளை ஷர்ட்டும், குல்லாயும் தரித்து வெள்ளை ‘பாட்ஜ்’ அணிந்துள்ள ஸெர்வ் செய்யும் நபர்களுக்கு ‘டிப்ஸ்’ கொடுப்பதைப் பற்றிச் சொல்கிறேன். அந்த நபர்களைப் பற்றி வோட்ஹௌஸ் நாவல் ஒன்றில் வரும் சம்பவத்தை நான் சந்தர்ப்பம் நேரும் போதெல்லாம் எடுத்துக் கூறுவது வழக்கம். அது எனக்கு அலுப்புத் தட்டுவதே இல்லை.

கதாநாயகன் லண்டனில் ஒரு ஹோட்டலில் சிற்றுண்டி அருந்தினார். பிறகு அவசரமாகக் கப்பலேறி அமெரிக்கா சென்று விட்டார். ஒரு வாரத்துக்குப் பிறகு நியூயார்க்கில் ஒரு ஹோட்டல் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது திடீரென்று ஒருவர் உள்ளே வந்தார். அவர் தமது கையை நீட்டிக் கொண்டிருந்தார். கதாநாயகன் லண்டனில் சிற்றுண்டி சாப்பிட்ட ஹோட்டலில் அந்த ஸர்வருக்கு டிப்ஸ் கொடுக்கவில்லை; அவர்தான் கடல் கடந்து வந்திருந்தார்!

'அடடா!', 'சே, சே' 'அட ராமா!', 'மோசடி', 'திருட்டு' என்பது போன்ற வார்த்தைகளைச் சட்டசபையில் உபயோகிக்கலாமா, கூடாதா? நமது தேசத்தில் சுதந்திரச் சட்டசபைகள் ஏற்பட்ட காலத்தில் இந்தப் பிரச்னை பல சபாநாயகர்களுக்குப் பெரிய தலைவலியாயிருந்தது. ஆனால், ஆரம்ப காலத்தில் சென்னை சட்டசபை சபாநாயகராயிருந்த ஸ்ரீ சிவஷண்முகம்பிள்ளை இந்தப் பிரச்னையை உற்சாகமாகத் தாங்குவார். ஒரு குறிப்பிட்ட வார்த்தை ஆட்சேபகரமானதா, இல்லையா என்று தெரிந்து கொள்ளச் சட்டசபை வேதமான மே எழுதிய 'பார்லிமென்டரி பிராக்டிஸ்' புத்தகத்தையும், பார்லிமெண்ட் சம்பிரதாயங்கள் பற்றிய புத்தகங்களையும் புரட்டிப் பார்ப்பார். உடனே ஒரு முடிவுக்கு வர முடியாவிட்டால் ஒரு நாள் குறிப்பிட்டு அன்றைய சுபதினத்தில் தமது அபிப்பிராயத்தைப் படிப்பார்! ஏனென்றால் அது அநேகமாக ஒரு வியாசமாக இருக்கும்.

பதினேழு வருஷ அனுபவத்துக்குப் பிறகு இப்போது எல்லா சபாநாயகர்களுக்கும் இந்த ஆட்சேபகரமான வார்த்தைகளைப் பற்றிய ஜாபிதா தலைகீழ்ப் பாடம். உடனுக்குடனே தங்கள் முடிவைத் தெரிவித்து விடுகிறார்கள்.

சென்ற வாரம் டாக்டர் லோஹியா லோக சபையில் புல்பூர் தொகுதி தேர்தலைப் பற்றிப் பேசினார். சர்க்கார் ஜீப் வண்டிகள் காங்கிரஸ் தேர்தல் பிரசாரத்துக்கு உபயோகப்படுத்தப்படவில்லை என்று கூறுவது 'பொய்' என்றார். 'பொய்' என்ற வார்த்தையை உபயோகிப்பது ஆட்சேபகரமானது என்று ஸ்ரீ மகாவீர் தியாகி கூறினார். சபாநாயகர் தலையிட்டு, "பொய் என்று சொல்வது ஆட்சேபகரமானதல்ல. ஆனால், 'அது சரியல்ல', 'அது உண்மையல்ல' என்று சொன்னால் நாசூக்காக இருக்கும்" என்றார்.

"சீரைக்குடி டப்பா செட் ஒன்றுக்கு இரண்டாகவே சீர் வைத்திருக்கிறேன்."

"ஒரு செட்டை நாத்தனார் எடுத்துக் கொண்டு போய் விட்டாலும், இன்னொன்றாவது இருக்கட்டுமென்று?"

"இல்லை, இல்லை. தஞ்சாவூர் அரிசி, ஆர்க்காடு அரிசி, ஆந்திரா அரிசி, அஸ்ஸாம் அரிசி, பர்மா அரிசி, தாய்லந்து அரிசி, அமெரிக்க அரிசி இன்னும் யூ. ஏ. ஆர் என்று சொல்கிறார்களே, அதான் யுனைடெட் அராபிக் ரிபப்ளிக் அரிசி எல்லாவற்றையும் தனித் தனியாகப் போடுவதற்காக!"

ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு தந்தை இருந்தார். அவர் மிகவும் கஞ்சத்தனமுள்ளவர். வடிகட்டிய அற்பர். அவர் ஒரு சமயம், தம் மகன் தொந்தரவு செய்வதைத் தாங்காது அவனுக்கு அவன் விளையாட்டுச் சாமான்கள் வாங்கிக் கொள்வதற்காக ஒரு பென்னி நாணயம் கொடுத்தார். பிறகு தாம் அதை அவனுக்குக் கொடுத்ததற்காகத் தமக்கென்று ஒரு பார்த்திங் திரும்ப வாங்கிக் கொண்டு விட்டார். இது ஸ்காட்லாந்து தேசத்திய கதை.

ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு குதிரை இருந்தது. அது தன் மீதேறிக் கொண்டிருந்த தன் யஜமானனைக் கீழே தள்ளியது. பிறகு தன் கால்களால் ஒரு குழியும் பறிக்கத் தொடங்கியது, தன் எஜமானனைப் புதைப்பதற்காக. இது ஒரு தமிழ் நாட்டுப் பழமொழிக் கதை. இந்த இரண்டு கதைகளிலும் நடந்தது போல் அரசாங்கம் நடந்து கொண்டிருக்கிறது. அரிசிப் பஞ்சத்தை உண்டு பண்ணிக் குடும்ப ரேஷன் கார்டு முறை ஏற்படுத்தினார்களா? அதன்படி அரிசியும், கோதுமையும் வாங்குபவர்கள் லிட்டர் ஒன்றுக்கு ஒரு பைசா கூடக் கொடுக்க வேண்டும்.

இது ரேஷன் ஏற்படுத்துவதனால் ஏற்படும் நிர்வாகச் செலவுக்காகவாம்!

சென்னை நகரத்தில் கிட்டத்தட்ட பதினைந்து லட்சம் பேர் (பெரியவர்களும் சிறியவர்களுமாக) அரிசியும் கோதுமையுமாகச் சுமார் இருபத்தைந்து லட்சம் லிட்டர் தானியங்கள் வாங்குவார்கள். இதற்காக இருபத்தைந்து லட்சம் பைசாக்கள் அதாவது வாரமொன்றுக்கு ரூ. 25,000 வசூலிக்கிறார்கள். மாதம் லட்சம் ரூபாய் ஆகிறது. இரண்டு மூன்று கார்டு விநியோக உத்தியோகஸ்தர்களும் சுமார் நூறு குமாஸ்தாக்களும் நியமிக்கப்பட்டதற்காகப் பொதுமக்களுக்கு இந்தத் தண்ட வரி. ரேஷன் ஒரு லிட்டரிலிருந்து மூன்று நான்கு பங்காக உயரும்பொழுது அதற்கேற்றபடி வசூல் மூன்று நான்கு லட்சங்களாக உயருமல்லவா?

—என். ஆர்.






இன்று
புதிய உறையுடனே
மிளிருகிறது

# லைப்பாய் இருக்குமிடம்:
# அதுவே... ஆரோக்கியம் இருக்குமிடம்

புத்துணர்வு! உற்சாகம்! ஆரோக்கியத்தின் புன்னகை! லைப்பாய் தேய்த்துக் குளித்த நல்லின்பம். அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைகிறது லைப்பாய்.
குளித்துடம்புக்குச் சுத்தம் ... சுறுசுறுப்பு ... சுகம்!
புதிய அழகு மேலுறை அணிந்த லைப்பாய்... கையடக்கமான புதிய வடிவம்: உங்களுக்கென்றே உருவானதல்லவோ. இன்றே பெறுவீர் லைப்பாய் சோப்.

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

L. 47-140 TM

## புரியாத சட்டங்கள்

இப்பொழுது உணவு நிலைமையைச் சமாளிக்க அரசாங்கம் போடும் சட்டங்கள் சற்றும் புரியவில்லை. எங்கள் கிராமத்தில் நேற்று தண்டோரா மூலம் கீழ்க்கண்டவாறு அறிவிக்கப்பட்டது:

''இப்பொழுது கிச்சிலி சம்பா அறுவடைக்கு இருப்பதால் அறுவடை செய்பவர்கள் முதலில் கிராம அதிகாரிகளுக்குத் தெரியப்படுத்த வேண்டும். அவர் ஆரணியிலிருக்கும் லைசென்ஸ் பெற்ற வியாபாரிக்குத் தெரியப்படுத்துவார். மேற்படி வியாபாரி களத்துக்கு வந்து ஆகும் மொத்த நெல்லில் மூன்றில் ஒரு பங்கை அரசாங்கம் நிர்ணயித்த விலைக்கே கொள் முதல் செய்வார். அறுவடையைத் தெரிவிக்காவிட்டாலோ அல்லது மூன்றில் ஒரு பங்கு கொடுக்க மறுத்தாலோ பிராஸிக்யூஷன் செய்யப்படுவார்கள்.''

இவ்வாறு ஓர் அரசாங்க அறிவிப்பு உள்ளதாக எந்தப் பத்திரிகையிலும் நான் பார்க்கவில்லை. பட்டாதார்களுக்கும் தனியே எழுத்து மூலமாக எந்த விதத் தகவலும் இல்லை. அவ்வாறிருக்கத் திடீர்த் தண்டோராவின் பொருள் என்ன?

மூன்றில் ஒன்று எந்தக் கணக்குப்படி வருகிறது? திருவள்ளுவரே ஆறில் ஒன்று தான் அரசாங்கத்திற்கு என்று சொல்கிறார்.

''தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான்'' ஆக ஐந்து போக ஆறாவது.

நான் இந்த வருடம்தான் பயிரிட ஆரம்பித்தவன். புன்னுக்கு உரம் விலை வெகு அதிகம். இவ்விலை கொடுத்து வாங்க முடியாததால் மகசூல் பாதியே வரும். இதில் நாங்களே சாப்பிடுவதற்கும் நாள் கிழமைகளில் விருந்துக்கும் இச்சிலி தேவை.

ஒரு வீடு என்றால் எத்தனையோ விசேஷங்கள் இராதா? தை மாதம் சீமந்தமும் வருகிறது. அதற்கு எவ்வளவோ அரிசி தேவைப்படும். இதையெல்லாம் அதிகாரிகள் ஒப்புக் கொண்டு கொள்முதல் செய்வார்களா? 'கிராமத்தைவிட நகரமே மேல்' என்ற எண்ணம்தான் தோன்றுகிறது.

முல்லண்டிரம் கிராமம்,
வடார்க்காடு
30-11-64

வெ. கிருஷ்ணமூர்த்தி

★

## நேருஜியின் உயில் பாடமாகலாமா?

காலம் சென்ற பிரதமர் ஸ்ரீ நேருஜியின் உயில் பள்ளிகளில் பாடமாகப் போதிக்கப் படவிருப்பதைத் தாங்கள் அறிவீர்களென நம்புகிறேன். அவ்வுயிலில் கங்கைக் கரையின் இயற்கை எழில் இலக்கியச் சுவையோடு கூறப்பட்டிருப்பினும் இந்துக்கள் பரம்பரையாகப் பின்பற்றி வரும் சம்பிரதாயங்களை மதிக்காத கூற்றுக்களும் உள்ளன.

அது மாணவர்களுக்குப் பாடமாக்கப்படுவது சரிதானா? ஏற்கனவே மாணவர்களிடத்தில் இந்த மதத்தைப் பற்றித் தப்பபிப்பிராயம் பரவியுள்ளதை அவ்வுயில் வலியுறுத்துமென அஞ்சுகிறேன்.

பொதுஜனக் கருத்தைத் திரட்டி இவ்வுயில் பாடமாகு முன் தடுத்து நிறுத்த வேண்டுவது அவசியம்.

விக்கபப்பாளையம்
30-11-64

தி. மூ. பாலன்

★

## இதென்ன அரிசியா?

இராணிப்பேட்டைப் பகுதியில் உள்ள உணவு தானிய விநியோக நிலவரத்தைப் பற்றி ஸ்ரீ கே. ஆர். கலியாணராமய்யர் அவர்கள் எழுதுவதாவது:

ரூ. 1.62 கொடுத்துத் தனிப்பட்ட வியாபாரிகளிடம் 2 லிட்டர் (ஒரு படி) முதல் தரமான கிச்சிலிச் சம்பா அரிசி சிரமமின்றி வேண்டிய அளவு வாங்க முடிகிறது. ஆனால் அதே நேரத்தில் என் பெயருக்கு வழங்கிய குடும்பக் கார்டு மூலம் வாலாஜா கூட்டுறவுக் கடையில் 14 லிட்டர் குறுவை நெல்லைக் கியூவில் காத்து நின்று ரூ. 3.92ம் கூலியாக லெவிக்காகப் பத்துக் காசும் அடையாளக் கார்டுக்காக 3 காசுமாகச் சேர்த்து ரூ. 4.05 கொடுத்து வாங்கி அதை உலர்த்தி, குத்தி, புடைத்து அரிசியாக்கியதில் 4 லிட்டர் அரிசியும், 1 லிட்டர் பதரும், அரை லிட்டர் நொய்யும், இரண்டு பிடி மண்ணும் கல்லும் தேறின. அந்த 4 லிட்டர் அரிசியும் மிக மட்டரகமானது. இதற்கு நாலு ரூபாய்க்கு மேலாகிறது எனில் ஒரு படி (2 லிட்டர்) விலை இரண்டு ரூபாய்க்கும் சற்றுக் கூடுதலாகிறது.

காவேரிப்பாக்கத்தில் ஒரு படி அரிசி ரூ. 1.87க்கு விற்றதற்காக ஒரு நபர் மீதும் ஆர்க்காட்டில் அதே காரணத்துக்காக வேறு சில வியாபாரிகள் மீதும் பாதுகாப்புச் சட்டத்தின்படி நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. அதே சமயம் தரக் குறைவான சர்க்கார் அரிசியை இதைவிட அதிக விலையான ரூ. 2 கொடுத்து வாங்கும் ஏழை மக்கள் யாரிடம் முறையிடுவது?

தானிய விலையை நியாயமாகக் கட்டுப்படுத்தி அமுல் நடத்தும் பொறுப்பை மட்டும் அரசாங்கம் ஏற்றுக் கொண்டு, தானிய வியாபாரத்தை வியாபார சமூகத்தின் பொறுப்பிலேயே விட்டுவிடுவதுதான் முறை. குடும்பக் கார்டு முறை, சர்க்கார் கொள்முதல் விற்பனை விநியோகம் முதலிய திட்டங்கள் எதுவும் உருப்படியான பலனைத் தரவே முடியாது. இன்னும் அதிகப்படியான நியாய விலைக் கடைகளையும் கூட்டுறவுக் கடைகளையும் அமைத்து இறக்குமதியாகும் அரிசி, கோதுமை முதலியவற்றை விற்பனை செய்யப் பரவ



வான ஏற்பாடு செய்வதும் பரிகாரமாக அமையும். இவற்றுக்கு மாறாகச் சர்க்கார் செய்யும் எந்த ஏற்பாடும் மக்களுக்குத் தொல்லைதான் கொடுக்கும்.

ஃ ஃ ஃ

தூங்காவைத் தெருவைச் சேர்ந்த திரு ஏ. வி. பழனியப்பன் அவர்கள் தற்போது குடும்பக் கார்டுக்கு விநியோகிக்கப்படும் அரிசியின் 'மாதிரி'யை ராஜாஜிக்கு அனுப்பியிருக்கிறார். இதுவரை நாமறிந்த பச்சரிசி, புழுங்கலரிசி எதிலுமே சேராத ஒரு வகையாக அது இருப்பதே அனுப்பி வைத்திருப்பவரின் குறையாகும். 'ஸாம்பிள்'களைச் சம்பந்தப்பட்ட மந்திரிமார்களுக்கும் அனுப்பியிருப்பதாகத் தெரிவிக்கிறார். இந்த அரிசியைச் சமைப்பதெப்படி என்று அரசாங்கம் ஒரு பாக சாஸ்திர நூல் வெளியிட்டால் நன்றாயிருக்கும்.

— ஆசிரியர்

★

## ஒரு குறை

இந்திய மண்ணில் கத்தோலிக்கக் கிறிஸ்தவர்களின் 38வது சற்பிரசாத மாநாடு நடப்பதை வரவேற்றும், பெருமைப்படுத்தியும் தாங்கள் பெருமனமுவந்து, 29—11—64 கல்கி இதழில் சிறப்புக் கட்டுரைகளும், அட்டைப் படமும் வெளியிட்டிருப்பதற்கு நன்றி. 'கத்தோலிக்கப் பெருவிழா' என்ற கட்டுரை மிகுந்த அக்கறையோடு எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் அதில் ஒரு குறை. 'இது என்னுடைய இரத்தம்' என்று இயேசு நாதர் மதுவை வைத்துச் சொல்லவில்லை. இயேசுநாதர் மது உண்டதாக எங்கும் சொல்லப்படவில்லை. இன்றைய திருப்பலிகளிலும் உபயோகிக்கப்படுவது மதுவல்ல. இதற்காக, தனிப்பட்ட முறையில் திராட்சைப் பழங்களிலிருந்து ரசம் எடுக்கப்படுகிறது. இது போதைப் பொருளுமல்ல — மதுவுமல்ல; திராட்சை ரசம். (Mass Wine) குருக்கள் மட்டுமே இதைப் பலி ஒப்புக்கொடுத்துப் பருகுவார்கள். பெருமளவில் அல்ல; உள்ளங்கை அளவுதான்.

இந்திய வான் படை,
கான்பூர் — அன்செல்ம் வாஸ்

★

## இரண்டாம் நிலைத் தமிழாசிரியரின் இன்னல் நிலை

வருங்கால இளைஞர்களையும், இந்நாட்டையும் உருவாக்கும் சிற்பிகள் ஆசிரியர்களே என்றெல்லாம் வெளிப்பட, உலகம் அறியப் பாராட்டிய அரசியலார் உண்மையில் ஆசிரியர்களுக்கு ஆக்கம் அளிக்கவில்லை.

பயிற்சியின்றி ஓரியண்டல் பட்டம் மட்டும் பெற்ற தமிழாசிரியர்களை (Mere O. T. Holders) போதிய கல்வித் தகுதி உடையவர்களாக ஏற்று, அவர்களை நிரந்தரமாக வேலை உறுதி முதலிய உரிமைகளோடு முறையான ஊதியத் திட்டத்தோடு முறைப்படி இரண்டாம் நிலைத் தமிழ் ஆசிரியர்களாக நியமிக்கலாம் என்பது அரசினரின் முந்தைய ஆணை. (G.O. MS 2483/ 28-10-1952 G.O. 276/11-2-1962)

''பயிற்சியின்றிப் பட்டம் மட்டும் (ஓ.டி.) உடையவர்கள் நிரந்தர நியமன உரிமையுடன் முறையான ஊதியத் திட்டத்துடன் இரண்டாம் நிலைத் தமிழ் ஆசிரியர்களாக நியமிக்கப் பெறும் தகுதியுடையவர்களே. ஆகையால் அவர்கள் ஊதிய உயர்வு பெறும் தகுதியுடையவர்கள் ஆவர்'' என்று பொருள்படும் அரசினரின் குறிப்பொன்றும் உள்ளது. (2675-E2/55-1/22-4-1955)

மேற்குறித்த காரணங்களைக் கொண்டும், அரசினரின் ஆணைகளைக் கொண்டும்தான் பள்ளிகளை நடத்தும் நிர்வாகிகள் எங்களுக்கு நிரந்தரமான ஊதியத் திட்டத்தில் (ரூ. 90–4–110–3–140) பணியாற்ற உத்தரவிட்டு, வேலைக்கும் எடுத்துக் கொண்டார்கள். அரசினரின் ஆணையின்படியே நாங்கள் 1—6—63 வரை இன்கிரிமென்ட் பெற்றுத் தமிழாசிரியர்களாகப் பணியாற்றி வந்தோம்.

திடீரென இவ்வாணைகட்கு முரணாக எங்கள் வாழ்க்கையைப் பாதிக்கும் வகையில் சென்னை மாநிலத்தின் அரசினர் (31534-E63-9829-10-63) என்ற ஆணையைப் பிறப்பித்துள்ளனர். இதனால் எங்கள் பள்ளி நிருவாகிகள் எங்களுக்கு அளித்து வந்த இன்கிரிமென்டை நிறுத்தி விட்டனர். அதோடு விடாமல் இதுவரை கொடுத்துள்ள இரண்டு மூன்று ஆண்டுகளுக்கான இன்கிரிமென்டுகளையும் உடனடியாகத் திருப்பிக் கட்டிவிட வேண்டும் என்கின்றனர். எப்படிப் பார்த்தாலும் இப்படிக் கூறுவது நியாயமில்லை என்பதை அனைவரும் ஒப்புக்கொள்ளுவார்கள்.

அரசினர் இதுவரை எங்களுக்குக் கொடுத்த இன்கிரிமென்டை நிறுத்தாமல் தொடர்ந்து கொடுக்க வேண்டும்.

அரசியலாரின் கருத்துப்படி, அவர்கள் ஆணையின்படி நாங்கள் ஆசிரியத் தொழிலுக்குத் தகுதியுடையவர்கள் என்றே கருதப்பட்டிருந்தமையால்தான் எங்களுக்கு மேற்சொன்ன உரிமைகள் வழங்கப்பட்டன. இதற்கு மாறாக முன்னுக்குப் பின் முரணாக அரசியலார் இப்போது செயல்படுகின்றனர்.

'ஆசிரியப் பயிற்சி என்ற தகுதி இந்தத் தமிழாசிரியர்களுக்கு வேண்டியதுதானே! அதை ஏன் அவர்கள் மறுக்கிறார்கள்' என்று கேட்கலாம். முறைப்படி அவர்களுக்குப் பயிற்சிக் கல்லூரியில் ஐந்து மாதப் பயிற்சியளிக்க முற்பட்டால் எந்த ஆசிரியரும் பயிற்சி பெறத் தயங்க மாட்டார்கள். ஆனால் பயிற்சிப் பள்ளியில் இடம் பெறுவதில் எத்தனையோ தொல்லைகள் உள்ளன.

பயிற்சிக் கல்லூரிக்கு விண்ணப்பித்தவர்களிடம் அவர்களுக்கு ஆசிரிய அநுபவம் உண்டா என்று கேட்கிறார்கள். ஆசிரியர்களாகச் சில ஆண்டுகளாவது பணியாற்றினால்தான் இக் கல்லூரியில் பயிற்சி பெற இடம் கிடைக்கும் போலும் என்றெண்ணிப் பள்ளியில் வேலை கோரி விண்ணப்பித்தால், ''பயிற்சி பெற்ற ஆசிரியர்களே தேவை, நீங்கள் பயிற்சி பெறவில்லையானால் ஆண்டின் இறுதியில் உங்களை வேலையினின்றும் நீக்குவோம்' என்கின்றனர். ஆசிரியர்களின் நிலை இப்படிக் கேலிக் கூத்தாகப் போய்விட்டது.

மேற்கு மாம்பலம்,
சென்னை — [illegible]
தமிழாசிரியன்

# அன்பின் அல்லல்

எம். எஸ். கமலா

இரவு பத்து மணி: ஜன்னலினூடே நிலவின் ஒளி கட்டிலின் மேல் பாய்ந்து கொண்டிருந்தது. எங்கோ வெகு தூரத்தில் மாங்கிளையில் அமர்ந்திருந்த குயில்விரகவேதனையில் தன் குரலை எழுப்பிக் கூவிக் கொண்டிருந்தது. கட்டிலில் தனியே புரண்டு கொண்டிருந்த விமலாவுக்கும் செப்பத்தரமற்ற வேதனை மனத்தைப் பிழிந்தது.

உறங்க முயற்சி செய்தாள். அவள் மனத்தில் சிந்தனை வெள்ளம் பெருக்கெடுத்தது. அது தூக்கத்தை அடித்துச் சென்றது. மணி பன்னிரண்டு முறை அடித்தது. அன்று மாலை அவள் கோயிலுக்குச் சென்று வரும் போது வழியில் அவள் மாமன் மைந்தன் ரங்கநாதன் பேசியது...... அவள் நெஞ்சை வேதனையில் ஆழ்த்தியது. அவனது பரிதாபமான பார்வை அவள் உள்ளத்தைக் குடைந்து கொண்டிருந்தது. அவள் மனத்தில் மாலைச் சம்பவங்கள் மிளிர்ந்தன. கோயிலிலிருந்து வந்து கொண்டிருந்தாள். தன்னை யாரோ அழைத்தாற் போலிருக்கவே திரும்பிப் பார்த்தாள். ரங்கநாதன்தான் வந்து கொண்டிருந்தான். ஒரு வருடத்துக்குமுன் பார்த்தது. அவனைப் பார்த்ததும் அவள் மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. தன்னையறியாத பயத்துடன் பரபரவென்று நடந்தாள். அவன் அவளைத் தொடர்ந்து நடந்தான்.

''நிற்காமல் போகிறாயே, விமலா! என்னைப் பார்க்கக்கூட வெறுப்பாயிருக்கிறதா?'' என்றான். அவன் குரலில் வேதனை ஒலித்தது.

''ஒன்று.... மில்லை..... கூப்பிட்டது நீங்களென்று நினைக்கவில்லை...'' என்று தன் செய்கையை மறைத்துப் பேசினாள்.

''விமலா! உன் வாழ்க்கைப் பாதை மணம் மிக்க பூங்காவாயிருக்கிறதா? உன் கணவர் நல்லவர்தானா? நீ எப்பொழுது இங்கே வந்தாய் ?''

''நன்றாயிருக்கிறது. உங்கள் கேள்வி. நேற்றைக்கு முன் தினம் இவ்விடம் வந்தேன்'' என்று சுருக்கமாகக் கூறி விரைவாய் நடக்கத் தொடங்கினாள்.

அவ்விடம் பேச விரும்பாததால் அவள் பேச்சு அர்த்தமற்றிருந்தது.

''என்னிடம் பேச விரும்பவில்லை என்று தெரிகிறது. நான் இரண்டாவதாகக் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லவில்லையே ?'' என்றான் ரங்கநாதன்.

அவள் அவனை வெறிக்கப் பார்த்தாள். அவன் அவள் முகத்தை ஆவலாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''என் கணவர் ரொம்ப நல்லவர். இரண்டு பெண்களை மோசம் செய்ய வேண்டுமென்று நினைப்பவரல்ல'' என்றாள் சீற்றத்துடன்.

ரங்கநாதன் திடுக்கிட்டான். வேதனையுடன் நெட்டுயிர்த்து. ''விமலா ! நீ எதையும் மறக்கவில்லை என்று நினைக்கிறேன். நான் மனமறிந்து எவரையும் மோசம் செய்யவில்லை. வாழப் போகும் சில ஆண்டுகளிலும் அம்மாதிரி நீசத்தனமான செய்கையிலிறங்கித் தாழ்ந்து போக மாட்டேன் என்ற நம்பிக்கையிருக்கிறது; மனிதனை மனிதன் நம்பாத

இந்த நாட்களில் என் பேச்சை நீ நம்ப மாட்டாய் என்று நன்கறிவேன். ஆனால் விரைவில் நீ நம்பக் கூடிய அத்தருணமும் வரும். அப்பொழுது ஒரு சொட்டுக் கண்ணீர் விடுவதைத் தவிர உன்னால் வேறொன்றும் கூற முடியாது. அதுவே போதும், இந்த அதிர்ஷ்டமற்றவனுக்கு. நினைவில் வைத்துக் கொள். வருகிறேன்'' என்று வேகமாகத் திரும்பிச் சென்றான். அவள் அவனைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வீட்டையடைந்தாள். அவளுக்கு வாய்விட்டு அழ வேண்டும் போல் இருந்தது.

'நீ வாயை விட்டு அழுதால் பெண் என்ற போர்வைக்குள் புதைந்து கிடக்கும் விலை மதிப்பற்ற தன்மானம் மறைந்து நீ அனைவராலும் கீழ்த்தரமாய்ப் பார்க்கப்படுவாய்' என்றது அறிவு. அதை ஆமோதிப்பது போல் சுவர்க் கடிகாரம் நள்ளிரவை விட்டு நகர்ந்து விட்ட நற்செய்தியை அறிவிப்பதே போல் ஒரு முறை அடித்தது. குளிர் காற்று 'விர்' ரென்று அடித்தது. வேண்டுமென்று அனைவரும் சேர்ந்து அவளுக்கு அநியாயம் செய்வது போல் அவளுக்குத் தோன்றியது. தன் மேல் பழி தீர்த்துக் கொள்ள யாரோ கங்கணம் கட்டிக் கொண்டிருப்பதுபோல் நினைத்தாள். அந்த எண்ணம் தோன்றியதும் அவள் உடல் நடுங்கியது.

அவள் மன ஏட்டில் முப்பது நாட்களுக்கு முன் நடந்த சம்பவந் தான் புரண்டது.

அன்று மாலை அவள் கணவன் ஹாலாசியம் அலுவலகத்திலிருந்து தாமதித்து வந்தான். அவனுக்கு விருப்பமான சிற்றுண்டியைச் செய்து வைத்திருந்த விமலா. ''ஏன் இன்று இத்தனை நேரம்?'' என்றாள் ஆவலாய்.

''ஏன்? அன்பும் அபிமானமும் பொங்கி வழிகிறதாக்கும்?'' என்றான் கட்டைக் குரலில். அவள் ஒன்றும் பேசவில்லை. அவனுடைய கடுமையான பேச்சைக் கேட்டுக் கலங்கினாள். சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''சாப்பிட வருகிறீர்களா?'' என்றாள் ஆர்வமாய் அருகில் வந்து.

''எனக்கொன்றும் தேவையில்லை. நீ போ, இங்கிருந்து'' என்று சீறினான். அவள் திகைப்பூண்டை மிதித்தவள் போல் அவனை வெறிக்கப் பார்த்தாள். அவனைக் கைப் பிடித்து ஒரு வருடமாகிறது. ஒரு நாளாவது அவன் அவளைக் கடிந்து கொண்டதில்லை.

அவர்கள் குடித்தனம் ஆரம்பித்த புதிதில் காரியாலயத்துக்குத் தாமதித்துச் செல்வான். மாலையில் சீக்கிரமே வந்து விடுவான். கேட்டால், ''பைலைத் திருப்பி வேலை செய்யும் போது உன் நினைவு வந்தது. அவ்வளவு தான். என்னுடன் வேலை செய்பவனை, 'எடுத்து வையடா' என்று சொல்லி விட்டுப் பறந்து வந்தேன்'' என்பான். அவள் தன் வாழ்க்கை காம்பு அகற்றப்பட்ட மல்லிகை மலர் போல் மணம் மிகுந்து, மகிழ்ச்சியாயிருக்கும் என்று நினைத்தாள். இன்று அவள் கண்கள் நீரைத் தேக்கின. விம்மியபடியே தன் கட்டிலில் படுத்தாள். அவன் வெளியில் சோபாவிலே உறங்கினான். அவளுக்கு வெகு நேரம் தூக்கம் வரவில்லை. அவள் துயில் கலைந்து விழித்த போது அவன் வீட்டிலில்லை. அவளுக்கு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. சிறகொடிந்த பறவை போல் சோபாவில் சாய்ந்து கிடந்தாள். பகல் கரைந்தது. இருள் திரை உலகை மூடிக் கொண்டது. அவள் மனமும் இருண்டது.

இரவு ஒன்பது மணிக்கு அவன் வீட்டுக்கு வந்தான். தெருக் கதவைப் படீரென்று மூடித் தாளிட்டு விட்டுத் தன் அறையில் போய்ப் படுத்தான். அவளை நிமிர்ந்து பார்க்கவில்லை. அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவனுடன் பேசவும் பயமாயிருந்தது. ஆனால் காரணமறியாது எத்தனை நாட்கள் இப்படி இருக்க முடியும்? துணிந்து அவன் அறைக்குள் சென்றாள். அவன் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்தான்.

''வா, உள்ளே!'' அவன் குரல் கரகரப்பாயிருந்தது. இரண்டு நாளாய் எரிந்து விழுந்து கொண்டிருந்தவன் அடித் தொண்டையில் அகங்காரத்துடனாவது அழைக்கிறானே என்று தன் அச்சத்தை வெளிக் காட்டாது உள்ளே சென்று மேஜையைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

''ரங்கநாதன் யார்?'' என்றான்.

அவள் மின்சாரத்தால் தாக்குண்டவள் போல் திடுக்கிட்டு நின்றாள். அவனைப் பற்றி அவள் மறந்தும் பேசியதில்லை. அவருக்கு அவனைப் பற்றி எப்படித் தெரியும் என்று சிந்திக்கத் தொடங்கினாள்.

''சொல்ல மாட்டாயா? அல்லது சொன்னால்...'' என்னும் போதே ''மாமன் மகன்'' என்றாள் நடுங்கியபடி. ஏனோ அவனையும் அறியாத பயம்.

''விதம் விதமாய் அலங்கரித்துக் கொண்டு அவனுடன் உலாவச் செல்லவும், திரைப் படத்துக்குப் போகவும் பிடித்தது. அவனைத் திருமணம் செய்து கொள்ளப் பிடிக்கவில்லையாக்கும்'' என்று ஆத்திரத்தோடு கேட்டான்.

அவளுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. அவள் கணவனின் பேச்சு விகல்பமாயிருந்தது. எனினும் அவள் வாய் மாத்திரம் பேசியது.

''நீங்கள்.... உம்.... உங்களுக்கு உண்மை தெரியாது'' என்று குமுறினாள். அவன் அப்பொழுதே சுவரில் அடிபட்ட பந்தைப் போல் எழுந்தான். ''சட், பேசாதே! இங்கிருந்து போ!'' என்று அவளைத் தள்ளி விட்டு வெளியில் சென்றான். அவளுக்கும் கோபம் மேலெழும்பியது. அவள் வாய் கடு சொற்களை உதிர்த்தது. ''இந்த ஆண்களுக்கே — உங்களுக்கு உள்ளம் இல்லை'' என்றாள். சென்று கொண்டிருந்தவன் கால் தடை கட்டிய நாகம் போல் நின்றது.

''உனக்குப் பேசக் கூடவா வாயிருக்கு?'' என்று படீரென்று அவள் கன்னத்தில் அறைந்துவிட்டு வெளியேறினான்.

நாட்கள் இரண்டு நகர்ந்தன. அவன் வரவில்லை. தன் அவல நிலையை அறிந்தாள் விமலா. தன் பெட்டியில் தன் துணிமணிகளை எடுத்து வைத்துக் கொண்டாள். ஒரு சிறு காகிதத்தில், ''தவிர்க்க முடியாத காரணத்

ஞல் நான் பிறந்தகம் செல்கிறேன். என் படிப்பும், பண்பும் என்னைப் பாபச் செயல்களுக்கு ஆளாக்க மாட்டா. நீங்கள் உண்மையை அறிந்த அன்று நாம் மறுமுறை கூடுவோம்!—விமலா'' என்று எழுதி வைத்து விட்டுப் பிறந்தகம் சென்று விட்டாள்.

ரங்கநாதன் மூன்று வயதுப் பாலகனாயிருக்கும் போது விமலா பிறந்தாள். விமலாவின் தாயார் அம்புஜம்மாளுக்குக் காலஞ்சென்ற தன் அண்ணன் மகனுக்கு விமலாவைக் கொடுத்து அளவற்ற செல்வத்திற்கு அரசியாக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. அதை வெளிப்படையாய்ச் சொன்னதில்லை. ரங்கநாதன் கல்லூரியில் சேர்ந்தவுடன் அவன் தாய் திடீரென்று இறைவனடி சேர்ந்தாள்.

ரங்கநாதனின் தாய் காலக் கருவில் கரைந்ததும் அம்புஜம் பெண்ணுடன் அண்ணன் வீடு சென்றாள். ஈமக் கிரியைகள் முடிந்ததும் ரங்கநாதனைத் தன்னுடன் வரும்படி அழைத்தாள். அவன் தன் பெற்றோர்கள் வாழ்ந்த இடத்தை விட்டு வர விரும்பவில்லை என்றும் மேல் படிப்பையும் அங்கேயே தொடர்ந்து படிக்கப் போவதாகவும் சொல்லி விட்டான்.

நான்கு ஆண்டுகள் கழிந்தன. விமலா பி. ஏ. இரண்டாவது ஆண்டு படித்துக் கொண்டிருந்தாள். ரங்கநாதன் ஐ. ஏ. எஸ்.ஸில் முதல்வனாகத் தேறி அவள் அத்தையிருக்கும் ஊரில் வேலை ஏற்க வந்தான். அழகும், அறிவும், தீரமும் ஒருங்கே உருவாய்த் தன்னைப் பார்க்க வந்த மருமகனைக் கண்டு மகிழ்ந்தாள். கலாசாலைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த விமலா தன் அன்னையின் முன் நிற்கும் அழகனை நிமிர்ந்து பார்த்தாள். இருவரின் கண்களும் ஆச்சரியத்தில் மலர்ந்து விரிந்தன. அவள் தலை குனிந்து சென்றாள்.

''அத்தை! இவள் விமலாவா? என்ன படிக்கிறாள்? ரொம்ப அழகாயிருக்கிறாள்.'' அவன் சொன்னது தயங்கித் தயங்கிச் சென்ற விமலாவின் காதில் கரைந்தது. அவள் மெய் சிலிர்த்தது. அவளுள் ஏதோ இன்ப உணர்ச்சி கிளுகிளுத்தது. கலாசாலைக்குச் செல்லாமல் தன் அறைக்குள் சென்றாள்.

ரங்கநாதன் ஐ. ஏ. எஸ். அம்புஜம்மாள் வீட்டிலேயே இருந்தான். விமலாவுக்கு அவனைப் பார்க்க ஆசை. ஆனால் பேச அச்சம். அவனுக்கோ வெளியில் விமலா தன்னவள் என்ற பெருமை. அவள் கம்பீரமாய் ராஜ நடை நடந்து வருவதைப் பார்த்து அவன் மனம் துள்ளும். அவள் புத்தகமேந்திப் பெண்

## ஸ்ரீ பரீக்ஷித்து மகாராஜா

கொச்சி சம்ஸ்தானம் ஸ்ரீ மகாராஜா பரீக்ஷித்து ராமவர்மா அவர்களின் மறைவு அறிஞருலகுக்குப் பெரிய நஷ்டமாகும். அவர் தர்க்கம் முதலிய சகல சாஸ்திரங்களிலும் கரை கண்டவர். தாமே பல சம்ஸ்கிருத காவியங்களைச் செய்திருக்கிறார். மார்கழி மாதத்தில் இவர்கள் நடத்தும் சதஸ் போஜ ராஜனின் காலத்தை நினைவூட்டும். அவரது ஆத்ம சம்பத்தை எண்ணினால் ஜனக மகாராஜாவின் நினைவு உண்டாகும். பிராசீனமான ஆசாரத்தை விட்டுச் சிறிதுகூட விலகாதவர். ஸ்ரீ பகவானிடத்திலும், வேத வித்துக்களிடத்திலும் அளவுகடந்த பக்தி கொண்டவர். ஸ்ரீ ஜகத் குரு காமகோடி ஆசாரியாளிடத்தில் அளவு கடந்த பக்தி கொண்டவர். ஆசாரியாள் இவருக்கு 'தர்சனகலாநிதி' என்ற விருது வழங்கியிருக்கிறார். இவர் வாக்கியார்த்தம் கூறுவது மிகத் தெளிவாகவும், சூட்சுமமாகவும் இருக்கும்.



ஒரு முறை இவர்களது அரண்மனையில் பல வித்துவான்களின் சபையில் ஸ்ரீ பாகவத உபந்யாசம் செய்தேன். ஆனந்தக் கண்ணீர் விட்டுக் கொண்டு சிரவணம் செய்தார்கள். இவர்களுடைய ஆத்ம சாந்தி அடையும்படி ஸ்ரீ குருவாயூரப்பன் அருள் புரிய வேண்டுகிறேன்.

— சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்.

குலத்துக்கே பூஷணமாய்ச் செல்வதைக் கண்டு அவள் அகமகிழ்வாள்.

அன்று ரங்கநாதன் தன் நண்பர்களுடன் தன் அறையில் பேசிக் கொண்டிருந்தான். அவன் மாமனும் (விமலாவின் தந்தை) அவர்களுடைய பேச்சில் கலந்து கொண்டார். ரங்கநாதன் மணம் புரிந்து கொள்ளாமல் இருப்பதைப் பற்றி அவர்கள் பரிகாசம் செய்துகொண்டிருந்தனர். விமலாவின் பரீட்சைகள் முடிந்ததும் விமலாவுக்கும் ரங்கநாதனுக்கும் திருமணம் நடக்கும் என்று மாமா சொன்னார். ரங்கநாதனின் மனம் களிப்புக் கடலில் கூத்தாடியது; தன் நண்பர்களை வழியனுப்பிவிட்டு விமலாவின் கலாசாலையை நோக்கிச் சென்றான். விமலா எதிரில் வந்து கொண்டிருந்தாள், அவளிடம் அதைச் சொல்லி ''இன்று ஷேக்ஸ்பியரின் 'விரும்பிய விதமே' என்ற படம் வந்திருக்கிறது. நான் போய் டிக்கெட் வாங்குகிறேன். நீ வீட்டில் சொல்லி விட்டு வா!'' என்றான்.

அவள் தன் தாயிடம் தான் தோழிகளுடன் படம் பார்க்கச் செல்வதாகச் சொல்லிச் சினிமா கொட்டகைக்கு வந்தாள். அங்கு ரங்கநாதன் ஓர் இளம் ஜோடியுடன் பேசிக் கொண்டிருந்தான். ரிக்ஷாவை விட்டிறங்கிய விமலாவைக் கண்டதும், ''வா, விமலா! இவர் என் நண்பர் சத்தியமூர்த்தி. இத்தம்மாள் சுசீலா சத்தியமூர்த்தி'' என்று கூறி விட்டுப் பிறகு அந்தப் பெண்மணியைப் பார்த்து, ''சகோதரி! என்னையாட்கொண்டு ஆட்டி வைக்கப் போகிற அழகி. என் அத்தை மகள் விமலா. பி.ஏ. இறுதி வகுப்பு. இவள் சிறைக் கைதியாக இன்னும் இரண்டு மாதங்கள் இருக்கின்றன!'' என்றான் நகைத்தபடி. சுசீலாவும் சத்தியமூர்த்தியும் வாய்விட்டுச் சிரித்தனர். விமலாவின் முகம் வெட்கத் திரையில் புதைந்தது. ரங்கநாதன், ''விமலா! ப்ளீஸ்! எக்ஸ்க்யூஸ் மீ. நான் ரொம்ப லேட்டா போறேனில்லையா? இதோ டிக்கெட் வாங்கிக் கொண்டு வருகிறேன்'' என்று சென்றான்.

சுசீலா விமலாவின் முதுகைத் தடவிய படியே, ''அண்ணி! நீ அதிர்ஷ்டக்காரி! அண்ணன் ரங்கநாதனைப் போல் நல்ல உள்ளமும் நல்ல அறிவும் படைத்த ஆண்மகன் கிடைப்பது அரிது. நான் இவரை (தன் கணவனைச் சுட்டிக்காட்டி) மணக்க விரும்பினேன். நாங்கள் இருவரும் ஒரே வகுப்பில் படித்தவர்கள். ஆம், ரங்கநாதன் எங்கள் காலேஜ் மேட். என் தாயும் இரு அண்ணன்மார்களும் சம்மதிக்கவில்லை. நானும் அவரும் வீட்டை விட்டு வெளியேறத் திட்டம் போட்டோம். அண்ணா ரங்கநாதன் அதற்கு இசையாது எங்களைத் திருப்பதிக்கு அழைத்துச் சென்று திருமணத்தை முடித்து வைத்தார்.'' என்று சொல்லும் போதே ரங்கநாதன் டிக்கட்டுகளுடன் வந்து விட்டான். எல்லோரும் படம் பார்த்தார்கள். அவள் அவனது தீரச் செய்கையை நினைத்து நினைத்து அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். படம் முடிந்து விளக்குகள் பளிச்சிட்டன. அதைக்கூட அவள் அறியவில்லை.

விமலாவுக்குப் பரீட்சைக்குப் படிக்க லீவு விட்டிருந்தார்கள். பரீட்சையானதும் அவள் திருமணத்தை அதிவிமரிசையாய்ச் செய்யப் பெற்றோர்கள் திட்டம் வகுத்துக் கொண்டிருந்தனர். திடீரென்று ரங்கநாதன் வீட்டுக்கு வருவதை நிறுத்தி விட்டான்.

மாதம் ஒன்றோடி விட்டது. ரங்கநாதனுக்காக அல்லும் பகலும் எதிர்பார்த்து ஏங்கித் தவித்தாள். அன்று வெளியிலிருந்து வந்த தந்தை அவள் தாயை அழைத்து, ''ஏய்! நீ உன் பெண்ணுக்குச் செல்லம் கொடுத்ததுமின்றி என்னையும் பைத்தியக்காரனாக்கினாய்!'' என்று கூவினார்.

''என்ன நடந்தது? ஏன் இப்படிக் கூத்தாடுகிறீர்கள்?''

''கூத்தாடுகிறேனா? நானல்லவா! உன் அண்ணன் மகன் என்று பெருமையடித்துக் கொண்டாயே, அவன் யாரோ ஒருத்தியுடன் வேறு வீட்டில் குடித்தனம் செய்கிறானடி. உன் பேச்சைக் கேட்டு நானும் நம்பினேனே?''

''நமக்கு ஆகாதவர்கள் யாரோ கிளப்பி விட்ட வதந்தி.....'' என்று இன்னும் ஏதோ சொல்லப் போனாள்.

''ஆகாதவர்களும் இல்லை. ஆனவர்களும் இல்லை. நானே என் இந்த இரண்டு கண்களாலும் பார்த்தேன். அவன் யாரோ ஒருத்தியுடன் காரில் போய்க் கொண்டிருந்தான்.''

பத்து நாட்களில் ஹாலாஸியம் எம்.ஏ.வை விமலாவுக்கு மணமகனாய்த் தேர்ந்தெடுத்து விட்டார் தந்தை. விமலாவுக்குத் தெரியும், தன் தந்தை பொய் சொல்ல மாட்டார் என்று. ஆனாலும் அவளுக்கு ரங்கநாதன் நினைவு அழியவில்லை. உலகத்தின் மேல் வெறுப்புத் தோன்றியது. ஆண்களை நம்புவதைப் போன்ற முட்டாள்தனம் பெண்களுக்கு வேறொன்றுமில்லை என்று தோன்றியது.

ஹாலாஸியத்தைக் கைப் பிடித்துப் பதினாறு மாதங்கள் பரமானந்தமாய் வாழ்க்கை நடத்தினாள். அவள் வாழ்க்கையில் கிரகணம் பிடித்து ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. கண்களிலிருந்து காட்டாறு பிரவாகமெடுத்தது. எங்கோ கோழி கூவியது. அவள் எழுந்து கட்டிலில் அமர்ந்து பார்த்தாள். நிலவு வெளிறியது. சாம்பல் பூக்கத்தொடங்கியது. பார்த்துக் கொண்டேயிருந்தாள். கண்கள் கனத்து இமைகளை இழுத்து மூடினாள் நித்திராதேவி.

எந்நேரம் தூங்கினாளோ தெரியாது. ''மணி பத்தாகிறதே! எத்தனை தரம் வந்து எழுப்புவது? விமலா! உடம்பு சுடுகிறதே? டாக்டர் வீட்டுக்குப் போவோமா?'' என்று தாய் அவள் நெற்றியிலும் கழுத்திலும் கையைத் திருப்பித் திருப்பி வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். மெள்ளக் கண்களைத் திறந்தாள். அழுததால் கண்கள் சிவந்து கோவைப் பழங்களாயிருந்தன. ''இந்தா! உன்னவர் கடிதம் எழுதியிருக்கிறார்'' என்று அவளிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தாள்.

இத்தனை நாட்களுக்குப் பின்பாவது தன் கணவர் உண்மையறிந்து தனக்குக்கடிதம் எழுதியதற்கு மன மகிழ்ந்தாள். எண்ணங்கள் இறகு கட்டிப் பறக்கப் படிக்கலானாள்:

## சுத்தமும், சுகாதாரமும் மிகுந்தது, சிறந்த முறையில் உள்ளது என்று

# வேகா (VEGA)

## வெஜிடேரியன் ஸ்பெஷாலிடி ரெஸ்டாரண்டிற்குப் பரிசு

சென்னை நகரில் மிகவும் சுத்தமானது, சுகாதாரம் மிக்கது, சிறந்த முறையில் உள்ளது வேகா ரெஸ்டாரண்ட், என்று 1964-ம் ஆண்டில் மதராஸ் கார்ப்பொரேஷனால் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது.

மிகவும் உன்னதமான பாராட்டு இது! வேகா ரெஸ்டாரண்ட் ஆரம்பித்த முதல் வருஷத்திலேயே இப் பாராட்டுக் கிடைத்திருப்பது விசேஷமானது. அதன் ■ ருசி மிகுந்த தென்னிந்திய, வட இந்திய, மேல்நாட்டுப் பாணி காய்கறி உணவு வகைகள் ■ மிகச் சிறந்த சேவை ■ சுகாதாரம் ■ இனிய சூழ்நிலை ■ ஏர்-கண்டிஷன் வசதி ஆகியவை குறித்த பாராட்டு இது.

**வேகா** வெஜிடேரியன் ஸ்பெஷாலிடி ரெஸ்டாரண்ட் ரீஸ்ட் ஹோம்ஸ் பிரைவேட் லிமிடெட் நிர்வாகத்தில் நடைபெறுவது.
5, காந்தி இர்வின் ரோடு, எழும்பூர், மதராஸ்-8

**வேகா - உயர் ரக உணவு வகைகள் — உன்னத சேவை**

(P-VEGA)



கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் நடைபெற்ற ஒரு விசேஷ விழாவில் சென்னை ராஜ்ய முதலமைச்சர் ஸ்ரீ M. பக்தவத்சலம் அவர்கள் வேகா வெஜிடேரியன் ஸ்பெஷாலிடி ரெஸ்டாரண்ட் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ P. G. S. மணி அவர்களுக்கு ஒரு கேடயம் பரிசாக வழங்குகிறார்.

"இக்கடிதத்தை நீ படிப்பாய் என்று நினைத்தே எழுதுகிறேன். நீ இத்தனை நாட்களாய் இங்கிருப்பது இன்று வரை எனக்குத் தெரியாது......" அந்த வாக்கியத்தைப் படித்ததும் அவள் நடுங்கியபடி கையெழுத்தைப் பார்த்தாள். 'ரங்கநாதன்' என்றிருந்தது. சிறிது நேரம் கண்களை மூடி யோசித்தாள். பிறகு படபடவென்று கடிதத்தைப் படிக்கத் தொடங்கினாள்.

"என் தாயின் ஈமச் சடங்குகளுக்கு உன் தாயுடன் நீ வந்த போதே நீ ஒருத்திதான் எனக்கு இம்மையிலும் மறுமையிலும் துணையானவள் என்ற எண்ணம் பதிந்தது. அந்த எண்ணம் இன்று வரை வாழ வைத்தது.

சற்றே பின்னோக்கிப் பழைய சம்பவங்களை நினைவுக்குக் கொண்டு வா! நான் ஒரு வாரம் எவர் கண்ணிலும் தென்படவில்லை: ஆம், அன்று அலுவலகத்தில் வேலை செய்து கொண்டிருக்கும் போது, "ஸ்டார்ட் இம்மீடியட்லி — கவிலா" என்று தந்தி வந்தது: என் உயிர்த் தோழனின் மனைவி கவிலாவைத் தான் உனக்குத் தெரியுமே! உடனே லீவ் போட்டு அவர்கள் இருக்கும் இடத்துக்குச் சென்றேன். அவர்கள் வீடு பூட்டியிருந்தது. சத்தியமூர்த்தி அபாயகரமான நிலையில் வைத்திய சாலையில் சேர்க்கப்பட்டிருப்பதாக அறிந்தேன். உடனே வைத்தியசாலைக்கு விரைந்தேன். சத்தியமூர்த்திக்கு நினைவே யில்லை. டாக்டரைப் போய்ப் பார்த்தேன். அவர் முகம் நம்பிக்கையூட்டுவதாயில்லை. என் தைரியம் மாண்டது. மூன்று. நாட்கள் ஓடி மறைந்தன. அன்று காலை கவிலாவை விட்டு விட்டு நான் மாத்திரம் வைத்திய சாலைக்கு வந்தேன். சத்தியமூர்த்தி நல்ல நினைவுடன் இருக்கிறான் என்று நர்ஸ் சொன்னாள். நடுக் கடலிலிருந்து கரையேறியவன் போல் களிப்புடன் அவன் கட்டிலருகில் சென்றேன். என்னைக் கண்டதும் அளப்பரிய ஆனந்தத்துடன், "கவிலா எங்கே?" என்றான். "வீட்டிலிருக்கிறாள். அழைத்து வரட்டுமா?" என்றேன்.

"அப்புறம் போய் அழைத்து வரலாம். அருகில் வந்து உட்கார்" என்றான்.

"நான் உன்னிடம் ஒன்று சொல்ல நினைத்தேன். சமயத்துக்கு வந்து சேர்ந்தாய்!" இதைச் சொல்வதற்குள் அவனுக்கு ஆயாசமாயிருந்தது. சற்றுச் சமாளித்துக் கொண்டு, "எனக்கு ஏதாவது ஆகிவிட்டால்......" என்னும் போதே அவன் குழி விழுந்த கண்களில் கண்ணீர் பெருகியது. நான் கைக் குட்டையில் என் முகத்தைப் புதைத்துக் கொண்டேன்.

"நான் சொல்வதைக் கேள். பாவம், கவி. கவிலா என்னை நம்பி எல்லோரையும் விட்டாள். நான் அவளை விட்டுச் சென்றால் அவள் கதி என்னடா? ரங்கநாதா! உன்னை யன்றி அவளுக்கோ எனக்கோ யாருமில்லை. அவளை நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும். அவள் தன் துயரை மறக்கும் வரையிலாவது நீ அவளைக் காப்பாற்று. அவள் இப்பொழுது ஐந்து மாத கர்ப்..." அவன் மூச்சு காற்றில் கரைந்தது.

நல்ல நண்பனை இழந்த நானும், அருமைக் கணவனை இழந்த கவிலாவும் இவ்வூருக்கு வந்து வாடகைக்கு வீடு எடுத்து அதி குடியேறினோம்.

எத்தனைதான் ஆறுதல் நான் சொன்ன போதிலும் கணவனை இழந்த கவிலாவின் ஆரோக்கியம் குலைந்தது. அவளை வைத்திய சாலையில் சேர்த்தேன். எனக்கு வேதனையாக இருந்தது. ஒருமுறை உன்னைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. வீட்டுக்குப் புறப்பட்டேன். உன் கழுத்தில் உன் கணவர் உரிமைக் கயிற்றைக் கட்டிக் கொண்டிருந்தார். உன் வாழ்க்கை மலர்ந்து மணம் வீச வேண்டும் என்று வாழ்த்திவிட்டுத் திரும்பினேன். வைத்தியசாலைக்குச் சென்றேன், கவிலாவுக்கு விஷயத்தைச் சொல்ல. சிறு பெண் குழந்தை உலகமறியாது உறங்கிக் கொண்டிருந்தது. கவிலா படுத்திருந்த இடம் காலியாக இருந்தது. நர்ஸைக் கேட்டேன். "குழந்தையை உலகுக்கு அளித்து விட்டு அவள் உலகை நீத்தாள். சடலத்தை எடுத்துச் செல்லுங்கள்" என்றாள். "கடவுளே! என் தைரியத்தை இப்படியா சோதனை செய்ய வேண்டும் என்று உயிரற்ற தாயையும், உயிருள்ள சேயையும் வண்டியில் ஏற்றிக் கொண்டு வெளியே வந்தேன்.

இப்பொழுது குழந்தை சந்தியா என்னிடமிருக்கிறாள். சின்னச் சின்னச் சொற்களைச் சிங்காரமாய்ச் சொல்கிறாள். அவளை வளர்க்க அன்னை வேண்டும். நான் இன்னும் எத்தனை நாட்கள் பொறுக்க முடியும்? கவிலாவின் இரு அண்ணன்மார்களுக்கும் கடிதம் எழுதினேன். என்கடிதம் கண்டதும் அவள் சின்ன அண்ணன் ஞானாலயம் வந்தான். என் விஷயம் முழுவதும் சொன்னேன். எனக்காகப் பரிதாபப்பட்டான். என் நிலைக்கு வருந்தினான். 'குழந்தையை எடுத்துச் செல்கிறேன்' என்றான். குழந்தை இன்னும் சில நாட்கள் என்னிடமே இருக்கட்டும் என்றேன். அவ்வப்பொழுது வந்து பார்த்துப் போவதாகச் சொன்னான். என் உடல்நிலை சரியாக இல்லை. இவ்விஷயங்களை உனக்குத் தெரிவிக்க வேண்டும் என்று வெகு நாட்களாக முயற்சி செய்தேன். இன்று தான் முடிந்தது. உனக்கு நான் ஏதாவதும் தீங்கு இழைத்திருந்தால் மன்னிப்பாயாக.
—ரங்கநாதன்."

விமலாவின் கண்கள் இருண்டன. இதயம் படபட என்று அடித்துக் கொண்டது. ஏதோ சங்கடம் அவளைக் கலக்கியது. அவள் தந்தை அடுத்த அறையில், "அம்புஜம்! உன் மருமகன் ரங்கநாதன் நேற்றிரவு காலமாகி விட்டானாம்" என்றார். அவள் தாய் வீறிட்டழுதாள். விமலா புழக்கடைப் பக்கம் சென்றாள். பின் பக்கத் தெருவில் பிணம் செல்வது தெரிந்தது. புழக்கடைக் கதவைத் திறந்து பார்த்தாள். இறுதிப் பிரயாணம் செய்து கொண்டிருந்த ஒரு ஜீவனின் பின் ஓர் ஆடவன்! உற்றுப் பார்த்தாள். செல்வது அவள் கணவன் ஞானசிவம். அப்படியானால் அன்பு உருவம் ரங்கநாதனு.... எல்லாவற்றையும் முடிபோட்டுப் பார்த்த விமலாவின் கண்கள் சுழன்றன. வாயிற்படியிலேயே விழுந்தாள். அவள் ஆத்மாவும் ரங்கநாதனைத் தேடிச் செல்கிறதோ ?

# பிறந்தகத்து ஜுரம்

துமிலன்

பாத்திரங்கள் :

| | | |
|---|---|---|
| சகுந்தலா | — | சமீபத்தில் ஸ்ரீமதி பட்டம் பெற்ற கன்னிகை |
| துஷ்யநாதன் | — | அவள் கணவன் |
| கண்ணுவமூர்த்தி | — | தந்தை |
| மேனகாவதி | — | தாயார் |
| வரதன் | — | சமையற்காரர் |
| வாசர் | — | வைத்தியர் |
| ரத்னம் | — | கன்றுக்குட்டி |
| சங்கரன் | — | வேலைக்காரப் பையன் |

காட்சி - 1

[சென்னையில் கண்ணுவமூர்த்தியின் வீடு. வெளியூர்ப் பிரயாணத்துக்கான ஏற்பாடுகள் தயாராகி விட்டன.]

கண்ணுவமூர்த்தி: புறப்பட வேண்டிய நேரமாகி விட்டது. சகுந்தலா தயாராக இருக்கிறாளா ?

மேனகாவதி: குழந்தை தயாராகிவிட்டாள்; மாட்டுக் கொட்டிலுக்குப் போயிருக்கிறாள்.



கண்ணுவமூர்த்தி: எதற்காக?

மேனகாவதி: அவள் வளர்த்த கன்றுக் குட்டி ரத்னத்திடம் சொல்லிக் கொண்டு வர.

கன்: சங்கரா! அந்தச் சுமங்கலி அம்மாள் தயாராயிருக்கிறாளா?

சங்கரன்: இருக்கிறாள். ஊதல் சப்தத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

கன்: மறந்தே போய் விட்டேன். இந்தக் கால் மெட்டிகளை அவளிடம் கொண்டு போய்க் கொடுத்துப் போட்டுக் கொள்ளச் சொல். அப்போதுதான் பூரண சுமங்கலி ஆவாள். ஆமாம், பால்காரன் பால் குடத்தோடு வருகிறேன் என்று சொன்னானே, என்ன ஆயிற்று ?

சங்: தெரியவில்லை.

கன்: அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தால் நல்ல வேளை தவறி விடும். இந்தப் புட்டிப் பால் புட்டியை அந்த அம்மாளிடம் கொடு. அவள் இதை எடுத்து வரட்டும்.

மே: இளம்பாலாமா?

கன்: நல்ல வேளை ஆரம்பிக்க இன்னும் மூன்று நிமிஷங்கள் பாக்கியிருக்கிறது. குழந்தை வந்து விட்டாளா?

மே: இதோ வந்து விடுவாள். அவள் தண்ணீர்விட்டு வளர்த்த சப்போட்டா செடி, மஞ்சள் கனகாம்பரச் செடி எல்லாவற்றினிடமும் சொல்லிக் கொண்டு வந்து விடுவாள்.

கன்: சங்கரா! கைக்குட்டைகள் தயாராக வைத்துக் கொண்டிருக்கிறாயா?

சங்: பதினைந்து இருக்கின்றன.

கன்: அம்மாளிடம் இரண்டு கொடு; எனக்கு இரண்டு கொடு. குழந்தைக்கு இரண்டு கொடு. அவை கண்ணீரால் நனைந்து போனதும் அவற்றை வாங்கிக் கொண்டு புதிதாகக் கொடு. கன்றுக்குட்டிக்கு ஒன்று கொடு! நீயும் ஒன்று எடுத்துக் கொள்.

சங்: எடுத்துக் கொண்டு விட்டேன். அது பாதி நனைந்து போய் விட்டது.

சகு: வரதன்! நான் போய் வருகிறேன்.

வரதன்: சரி, அம்மா !

சகு: அம்மா, நான் போய் வருகிறேன்:
(விசும்பி அழுது கொண்டே)

மேன: போய்விட்டு வா, கண்ணு. அடிக்கடி கடிதம் போடு.

சகு: முடிந்தால் காலையில் ஒன்று, சாயங்காலம் ஒன்று போடுகிறேன், அம்மா.

மே: குழந்தையை நீங்கள் புருஷன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போவதற்கு முன்னால் இங்கேயே என் காது கேட்க ஆசீர்வாதம் செய்யுங்கள்!



கன்: குழந்தாய்! உனக்குச் சர்வமங்களமும் உண்டாகுக. உன் புருஷன் நீ சொன்னபடி கேட்டு நல்ல பிள்ளையாக நடந்து கொள்வானாக !

மேனகா: சங்கரா! இன்னொரு கைக் குட்டை கொடு!
(கண்ணில் நீர் ஆறாய்ப் பெருகுகிறது)

கன்: சங்கரா! நல்ல வேளை ஆரம்பிக்க இன்னும் ஒரு விநாடி இருக்கிறது. ஊதுகுழலை எடுத்து ஊது! (சங்கரன் ஊதுகிறான்)

கன்: சகுந்தலா, கிளம்பு அம்மா !

[தெருவில் எதிரில் சுமங்கலி அம்மாள் காலில் அணிந்திருந்த மெட்டிச் சத்தம் 'ஜல் ஜல்' என்று கேட்க இடுப்பில் பால் புட்டியை ஒரு குடத்தை எடுத்து வைத்துக் கொண்டு வருவது போல் வருகிறாள்.]

கன்: நல்ல சகுனமாகிறது. நாங்கள் போய் வருகிறோம்.

மே: அந்த அம்மாளுக்கு முன்னால் ஒரு ஐஸ்கிரீம் சைக்கிள் வண்டிக்காரன் மிக வேகமாய் வருகிறானே.

கன்: அது பேஷான சகுனம். ஐஸ்கிரீமில் பால், சர்க்கரை, பழச்சத்து எல்லாம் இருக்கின்றனவே, உனக்குத் தெரியாதா ?

சகு: அம்மா, போய் விட்டு வரேன். போய் விட்டு வரேன் அம்மா:

[மேனகாவதி பிரிவுத் துயரம் தாங்காமல் தலையை ஆட்டுகிறாள்.]

## காட்சி - 2

[பங்களூரில் துஷ்யநாதன் வீடு.]

துஷ்யநாதன்: எப்படியிருக்கிறது?

வைத்தியர் வாசர்: உடம்பில் எல்லாம் சரியாயிருக்கிறது. ஜுரம் மட்டுந்தான் 115 டிகிரியிருக்கிறது.

துஷ்: ஹா அது குறைந்து விடுமா?

வைத்: இது ஏறுமுகமாக இருக்கிறது. ஆனால் நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. இந்தத் தர்மாமீட்டர் பிரத்தியேகமாகச்செய்யப்பட்டது. ஜுரம் 150 டிகிரியானாலும் மிகச் சுலபமாக அளந்து காட்டுமாக்கும்!

துஷ்: ஜுரம் குறையுமா என்று கேட்கிறேன் ஸார்!

வைத்: ஒரு விஷயம் கேட்பதற்கு மன்னிக்க வேணும். பெண் கலியாணத்துக்கு ஏதாவது ஆட்சேபம் சொன்னாளா?

துஷ்: ஆட்சேபமாவது? என்னைக் கலியாணம் செய்து கொள்ளா விட்டால் பெண்கள் ஹோம்கார்டில் சேர்ந்து கொண்டு விடுவதாகக் கூடப் பயமுறுத்தினாள்!

வைத்: நல்லது. கல்யாணமான தினத்தன்று அவள் கையைப் பிடித்துக் கொண்டபோதெல்லாம் கை சூடாயிருந்ததா?

துஷ்: கதகத வென்று இருந்தது.

வைத்: அது காதல் ஜுரம். அத்துடன் வேறு ஒரு வகை ஜுரமும் கலந்து கொண்டிருக்கும். இந்தக் கலப்பு ஜுரம் பெண்ணின் கழுத்தில் தாலி கட்டியதும் தோன்ற ஆரம்பிக்கும்.

துஷ்: பதினான்கு காரட் பொன் தாலி கட்டுவதனாலா?






வை: நான்தான் கவலைப்பட வேண்டாம் என்று அடித்துச் சொல்கிறேனே.

துஷ்: இப்படிக் கடுமையாக ஜுரம் ஏன் அடிக்கிறது?

வை: சொல்கிறேன். முதலில் இவளைப் பற்றிய விவரங்களைச் சொல்லுங்கள்.

துஷ்: சகுந்தலா என் மாமனார், மாமியாருக்கு ஒரே பெண். எங்கள் இருவருக்கும் போன மாதம்தான் கல்யாணம் ஆயிற்று. அவள் தந்தை இரண்டு தினங்கள் முன்னர் தான் அவளை இங்கே அழைத்துக் கொண்டு வந்து விட்டுப் போனார். நேற்றுத்தான் நாங்கள் எங்கள் கல்யாணத்தின் இருபத்தைந்தாவது நாள் பூர்த்தியானதைக் கொண்டாடினோம். நேற்று இரவு திடீரென்று ஜுரம் ஆரம்பித்தது. காலையில் உங்களுக்கு டெலிபோன் செய்வதற்குள் உடல் தணல் மாதிரி சுடத் தொடங்கி விட்டது....

வைத்: உங்கள் தாயார்....

துஷ்: எனக்குத் தாயார், அண்ணன், தம்பி, அக்கா தங்கை யாருமே இல்லை.

வைத்: உங்களுக்குக் கலியாணம் எப்படி நிச்சயமாயிற்று?

துஷ்: கண்ணுவரூர் தந்திக்கும் எனக்கும் பழக்கமான ஒரு நண்பர் எங்களை அறிமுகம் செய்து வைத்தார். பெண்ணைப் பார்த்தேன். நிச்சயமாகி விட்டது;

வைத்: இல்லை. நவரத்தினத் தாலி கட்டினாலும் அது தோன்றாமலிராது. அதன் கடுமை துயரைப் பொறுத்தது. அந்த ஜுரத்துக்குப் பெயர் பிறந்ததில்லோ குன்யா.

துஷ்: சிக்கன்குன்யா ஜுரத்துக்கும் இதற்கும் சம்பந்தமுண்டா!

வைத்: அது கிருமிகளால் உண்டாவது. இதில் கிருமிகளுக்கே இடமில்லை. தவிர அது கேவலம் 106, 107 டிகிரிக்கு மேல் போவதில்லை. இது 150 டிகிரி வரை போகும்.

துஷ்: நீங்கள் ஜுர வேகக் கணக்கைப் பற்றி இப்படித் தமாஷாகப் பேசி விடுகிறீர்கள். எனக்குப் 'பக் பக்' என்கிறது:

வைத்: பயப்படாதீர்கள். என் நண்பர் ஒருவரின் மனைவிக்கு இப்படித்தான் ஜுரம் அடித்து விட்டது. நான் ஒரு பிரிஸ்கிரிப்ஷன் எழுதிக் கொடுத்தேன். குணமாகி விட்டது.

துஷ்: அதை எனக்கும் எழுதிக்கொடுங்கள். காலதாமதம் செய்யாதீர்கள்.

வைத்: உங்கள் பண வசதி எப்படி?

துஷ்: நான் அரசாங்க கட்டடங்கள் பல கட்டி வருகிறேன். கன்ட்ராக்டர்:

வைத்: அப்படியானால் சரிதான்: நீங்கள் இன்றே சென்னைக்குப் புறப்பட வேண்டும்;

துஷ்: இந்த ஜுரத்துடனா?

வைத்: நான் சொல்கிறபடி செய்யுங்கள்: எத்தனைக்கெத்தனை வேகமாகச் செல்கிறீ

# லிஸ்டெரின்

## இரட்டிப்புப் பாதுகாப்பு இன்றும் என்றும்

லிஸ்டெரின் ஆன்டிசெப்டிக் பட்டவுடன் கிருமிகள் அழிக்கப்படுகின்றன. பல்லிடுக்குகளில் சிக்கியிருக்கும் உணவுப் பொருட்களை விரைவாகவும் சுத்தமாகவும் அகற்றுவதுடன் நாள் முழுவதும் உங்கள் சுவாசம் தூய்மையாகவும் இருக்க உதவுகிறது. லிஸ்டெரின் பற்பசை பற்களை வெண்மையாகவும் பிரகாசத்துடனும் வைத்திருக்கிறது. மேலும், அவை கெட்டுப்போகாமலும் பாதுகாக்கிறது.

உங்கள் குடும்பத்திலுள்ள அனைவருடைய வாய் ஆரோக்கியத்திற்கு உறுதியுடனும் விவேகத்துடனும் லிஸ்டெரின் அளித்து இரட்டிப்புப் பாதுகாப்புப் பெறுங்கள். காலையிலும் இரவிலும் லிஸ்டெரின் உபயோகியுங்கள்.







வார்னர் - இந்துஸ்தான் லிமிடெட்.

mas WL-3857 TAM.

## மாலை ஸ்கூலில் மாலதி பாடவேண்டும்—ஆனால் அவளுக்கு ஜலதோஷம்!










ஸாரிடான் துரிதமாக, கெடுதல் எதுவுமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடல்வலி, ஜுரம் வருவதுபோலிருப்பது, ஜலதோஷம் இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். ஸாரிடான் உலகப் புகழ்பெற்ற வலி நிவாரணி.

எப்பொழுதும் வீட்டில் ஸாரிடான் வைத்திருங்கள்.

பெரியவர்களுக்கு ஒரு வில்லை முழு டோஸ்; குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.




ஒரே வில்லை ஸாரிடான் போதும்

ஒரு வில்லை 13 பைசா

# ஸாரிடான் 'ரோஷ்'

வலியைப் போக்குகிறது. ஆசுவாசப் படுத்துகிறது. புத்துணர்ச்சி யூட்டுகிறது

'ரோஷ்' தயாரிப்பு ஏக டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

வரதன்: ஆமாம், பாட்டி. இந்த ஊரிலே தான் இருக்கிறேன். மாப்பிள்ளையை அகஸ் மாத்தாகச் சந்தித்தேன். இந்த வீட்டிலேயே வேலை செய்து வரலாம் என்றிருக்கிறேன்.

மேனா: நீ நம்ப வீட்டில் சமைத்தால் என்ன? இங்கே சமைத்துப் போட்டுக் கொண்டிருந் தால் என்ன? இதுவும் நம்ப வீடுதானே!

சகு: யாரு, வரதனா? நீ இங்கே இருக் கிறாய் என்று அவர் இப்போதுதான் சொன் னார். ஆனால் வீட்டுக்குள் நுழைந்ததுமே எனக்கு உன் ஞாபகம்தான் வந்தது.

வரதன்: ஏன்?

சகு: தாளித்துக் கொட்டலில் சற்றுக் கரு கிய வாசனை கும்மென்று அடித்தது.

வரதன்: அப்படி இருந்தால்தானே, குழந்தை, உனக்குப் பிடிக்கும்?

சகு: ஆமாம், வரதன். நீ என் ருசி அறிந்து சமைத்துப் போடுகிறாய்.

[மூன்று நாட்களுக்குப் பிறகு 'அம்மே, அம்மே' என்ற சப்தம் காதில் விழுகிறது.]

மேனா: நம்ப கன்றுக்குட்டி கத்துகிறது மாதிரி இல்லை? நம்ப மாடும், கன்றும் திருட் டுப் போய் விட்டனவே. ஒருவேளை அதுவாக இருக்குமோ ?

கன்றுக்குட்டி: அம்மே, அம்மே.

சகு: அது என் ரத்னம்தான் அப்பா:

[எல்லாரும் தோட்டத்தின் பின்பக்கம் செல்கிறார்கள். அங்கே துஷ்ய ந்தன் பக்கத்தில் ஒரு மாடும் கன்றும் இருக்கின்றன. சகுந்தலா ஓடிப் போய்க் கன்றுக்குட்டியைக் கட்டிக்கொண்டு முத்தமிடுகிறாள்.]

கண்: இது எப்படி இங்கே வந்தது?

துஷ்: எவனோ ஒருவன் தெருவோடு ஓட்டிக் கொண்டு போனான். நீங்கள் விலைக்கு விற்று விட்டீர்கள் என்று சொன்னான். எனக்கு அதைவிட இஷ்டமில்லை. நான்கூட ஐம்பது ரூபாய் கொடுத்து வாங்கினேன்.

கண்: பொய். அவன் திருடி ஓட்டிக் கொண்டு வந்திருக்கிறான்.

துஷ்: எப்படி இருந்தால் என்ன? நம்ப சொத்து நம்மிடம் வந்து விட்டது.

[மேலும் இரண்டு தினங்களுக்குப் பின்னர்.]

மேனா: சகு! இன்றைக்கு ராத்திரி ஊருக் குப் போகிறோம்.

சகு: ரயிலில் இடம்கூட ரிசர்வ் செய்து விடச் சொல்லியிருக்கிறேன்.

கண் : நீ எப்போது வருவாய் ?

சகு: நான் எப்படிச் சொல்ல முடியும் ? அவரை விட்டு விட்டு நான் எப்படி வருகிறது?

கண்: மாப்பிள்ளை, குழந்தை சொல்வது சரிதானே. கொஞ்சம் இப்படி வாருங்கள்.

[மாப்பிள்ளையும் மாமனாரும் தனியாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]

கண்: இங்கே கொண்டு வந்து விடு கிறேன் என்று சொன்ன போது சகுந்தலா அழுது அமர்க்களப்படுத்தினாள். முதல் முதல் இங்கே நான் கொண்டு வந்து விட்டுப் போன போது கடுமையான ஜுரம் அடித்ததற்குக் காரணம் எங்களை விட்டுப் பிரிந்திருப்பதற் காகத்தான். விமானம் சென்னைக்கு வந்து கொண்டிருந்த போதே ஜுரம் குறைந்து விட்டது. இப்போது அடியோடு மாறிவிட் டிருக்கிறாளே, அது எப்படி?

துஷ்ய: முன்னே அவளைப் பரிசோதித்த டாக்டர் வாசர் ஒரு பிரிஸ்கிரிப்ஷன் எழுதிக் கொடுத்தார். அதன்படி செய்தேன்.

[கடிதத்தைக் கொடுக்கிறார். கண்ணுவ மூர்த்தி அதைப் படிக்கிறார்:]

இந்தப் பெண் நோயாளி நீண்ட கால மாக வசித்து வந்த அவளது சொந்த வீட் டைப் போன்றே உள்ள ஒரு வீடு கட்ட வும். கூடிய வரையில் அந்த வீட்டிலிருந்த அதே சூழ்நிலை இருக்கும்படி ஏற்பாடு செய்யவும். அவளுக்குப் பழக்கமான சமையலுக்கும் ஏற்பாடு செய்ய முடிந் தால் செய்யவும். ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை யில் வாழ்ந்து வந்த ஒரு குறிப்பிட்ட உணவு சாப்பிட்டுப் பழக்கமான ஓர் இளம் பெண்ணைத் திடீரென்று ஒரு புதிய இடத் துக்குக் கொண்டு போய் வைத்துச் சுதந் திரமில்லாமல் செய்து, அவள் நாக்குக்கு அதிகப் பழக்கப்படாத உணவையும் சாப் பிடச் செய்தால் மனம் கஷ்டப்படுகிறது: தவிர, பல பெண்களுக்குப் பூனை மாதிரி பழகிய வீட்டுச் சபலம் வேறு உண்டு: இதனாலெல்லாம் ஏக்கம் உண்டாகி ஜுரம் ஏற்படுகிறது. அதற்குத்தான் பிறந்தகத்து ஜுரம், அல்லது பிறந்தகவியோ குன்யா என்று பெயர் வைத்திருக்கிறேன்.

கண்: கெட்டிக்கார டாக்டர். நீங்கள் முதல் தரம் வீட்டுக்கு வந்த போது அடிக்கடி தோட்டத்தைச் சுற்றி வந்ததும், நடுநிசியில் சமையலறையில் இருந்ததும் எனக்கு ஆச் சரியமாக இருந்தது. இப்போது விஷயம் புரிகிறது. எங்கள் வீட்டின் பிளானை எடுத் திருக்கிறீர்கள். நான் சொல்வது சரிதானே?

து: சரிதான்.

கண்: என் சமையல்காரனை நீங்கள்தான் சரிப்படுத்தி அழைத்து வந்திருக்கிறீர்கள்...: மாடு, கன்றுக்குட்டி இரண்டையும் திருடிக் கொண்டு வர ஏற்பாடு செய்தது நீங்கள்தான்:

துஷ்: குற்றங்களை ஒப்புக் கொள்கிறேன்: சகு எப்படியாவது திருப்தியாக இருந்தால்...:

கண்: எங்களுக்கு வேண்டியதும் அது தானே. (சகுந்தலா வருகிறாள்)

சகு:: அப்பா! எனக்கு ஜுரம் வரும் போலிருக்கிறது.

துஷ்: ஹா! மறுபடியும் ஜுரமா? எத்தனை டிகிரி ?

சகு: இந்தத் தடவை அது குரியனது உஷ்ணமத்தினை ஏறிவிடும் போல் இருக்கிறது. ஏனென்றால், நீங்களும் அப்பாவும் பேசிக் கொண்டிருந்தது எல்லாம் என் காதிலும் விழுந்தது! புக்கக குன்யா வந்திருக்குமோ?

---

டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் 22-ந் தேதி மாலை சென்னையை விட்டுப் புறப்பட்டு 23ந் தேதி காலை தஞ்சாவூர் போய்ச் சேருகிறார். தஞ்சாவூரில் ராஜா சத்திரத்தில் தங்கியிருப்பார். 24-ந் தேதி மாலை அங்கிருந்து புறப்பட்டு 25-ந் தேதி சென்னை வந்தடைகிறார்.

# போட்டா போட்டி

## விஜயம்





ஆப்த நண்பர்களுக்கு உதாரணம் வேண்டுமானால் ராமுவையும், கிட்டுவையும்தான் பார்க்க வேண்டும். நகமும் சதையும், பாலும் நீரும் என்றெல்லாம் உவமை கூறி அவஸ்தைப்படுவதைவிட, ராமுவும் கிட்டுவும் போல என்று நெருங்கிய நட்புக்கு உவமை கூறுவதுதான் சாலப் பொருந்தும்.

இப்பொழுது இணை பிரியாத நண்பர்களாயிருக்கும் இவர்கள் இரண்டு வருஷங்களுக்கு முன் எலியும் பூனையுமாக இருந்தார்கள். அதுவும் ராமுவுக்குக் கிட்டுவிடம் அளவு கடந்த ஆத்திரம். அசாத்தியக் கோபம். இருவருக்கும் எதிலும் போட்டி மனப்பான்மைதான்.

புரசவாக்கம், ரூக்காத்தாள் தெருவில் ராமு ஒரு லாண்டரி வைத்தான். அதே தெருவில் மற்றொரு கோடியில் கிட்டுவும் ஒரு லாண்டரி ஆரம்பித்தான். இரண்டு லாண்டரிகளும் நன்றாகவே நடந்தன. ஆனால் ஒரு மாசத்துக்குத்தான். அப்புறம் ராமுவின் லாண்டரி கொஞ்சம் கொஞ்சமாக நஷ்டத்தில் இயங்க ஆரம்பித்தது. இத்தனைக்கும் ராமு சுத்தமான சலவைக்கு உத்தரவாதம் கொடுத்து நன்றாகவே தொழிலை நடத்தி வந்தான்.

கிட்டுவின் லாண்டரி மட்டும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது. ராமுவின் வாடிக்கைக்காரர்களெல்லாம் கிட்டுவின் வாடிக்கைக்காரர்களாகிக் கொண்டிருந்தனர். ராமுவின் பொறுமை பொங்கி எழுந்தது. தன் நண்பர் குழுவில் இது பற்றித் தீர்க்காலோசனை செய்து அவர்களுக்குள் ஒரு நிபுணனைத் தேர்ந்தெடுத்துக் கிட்டுவின் லாண்டரியின் அபிவிருத்திக்குக் காரணத்தை ஆராய்ந்து வருமாறு அனுப்பி வைத்தான்.

இரண்டு நாட்களில் அந்த நண்பன் ராமுவிடம் திரும்பி வந்தான். அடக்க முடியாத ஆவலுடன் ராமு நண்பனின் கையைப் பிடித்து உட்கார வைத்து அவன் ஆராய்ச்சி விவரத்தைக் கேட்கத் தயாரானான்.

''ராமு, கிட்டு ரொம்பக் கெட்டிக்காரன். லாண்டரிக்குப் பக்கத்துக் கடையையும் வாடகைக்கு எடுத்துக் கொண்டிருக்கிறான். அங்கே ஒரு தையற் கடை ஆரம்பித்திருக்கிறான்....'' என்று நண்பன் கூறி முடிப்பதற்குள் ராமு இடைமறித்து, ''....தையற் கடையா? அப்படியானால் அவனுக்கு வரும் லாபம் லாண்டரியிலிருந்து இல்லையா...?'' என்று குரலில் அலட்சியம் தொனிக்கக் கேட்டான்.

''...கொஞ்சம் பொறுமையாகத்தான் கேளேன். சலவைக்குப் போய்க் கிழிந்து போகும் உருப்படிகளைத் தைத்துக் கொடுப்பதற்கும், பொத்தான் விழுந்து போன உருப்படிகளுக்குப் பொத்தான் வைத்துக் கொடுப்பதற்கும் அந்தத் தையற் கடை உபயோகப்படுகிறது. சலவை செய்யும் உடுப்புக்களிலிருந்து விழுந்துவிடும் பொத்தான்களைச் சேகரித்து வரப் பையன்களை ஏற்பாடு செய்திருக்கிறான், கிட்டு! இவற்றுக்கெல்லாம் தனித்தனியாக சார்ஜ் செய்து விடுகிறான்!'' என்றான் நண்பன்.

இதைக் கேட்ட ராமு அசந்து போனான். உடனே லாண்டரியை மூடிவிட்டு, வேறு பிழைப்புக்கு யோசனை செய்யலானான்.

பக்கத்துத் தெருவில் வெகு நாட்களாக ஒரு காய் கறிக் கடை இருந்தது. அதை நடத்தி வந்தவன் இறந்து விடவே, அந்தக் கடையை எடுத்து நடத்தினான் ராமு. அந்தக் காய் கறிக் கடைக்கு ராமு பின்வருமாறு விளம்பரம் செய்தான்: ''பண்டைக் காலம் முதல் வெற்றிகரமாக நடந்து வரும் பழைய காய் கறிக் கடை. நெடுநாளைய ஆதரவாளர்களைப் பெற்றது...''

இதைப் பார்த்து அதி மேதாவி கிட்டு சும்மா இருப்பானா? அவனும் ஒரு காய்கறிக் கடையை ஆரம்பித்தான். ''பழைய ஆதரவாளர்களைக் கொண்ட புதிய காய்கறிக்கடை. பழைய காய்கறிகளை நாங்கள் விற்பதில்லை. எல்லாம் புதிது'' என்று போர்டு எழுதினான்.

ராமுவுக்கு அவமானம் தாங்கவில்லை. காய் கறிக் கடையையும் மூட்டை கட்டினான்.

பிறகு, தீர்க்காலோசனை செய்து ஒரு ரொட்டிக் கடையை ஆரம்பித்தான். வழக்கம்போல் ஒரு விளம்பர போர்டு தயாரித்தான். அதில் ''பல பயில்வான்களுக்கு மூதுகுக்கு மண்காட்டிய பிரசித்தி பெற்ற பயில்வான் பராக்கிரம சிங் எங்கள் கடை ரொட்டியைத்தான் சாப்பிடுகிறார்'' என்று எழுதி வைத்தான். கிட்டு சும்மா இருப்பானா? இன்னொரு கடையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு ரொட்டி வியாபாரம் செய்ய ஆரம்பித்தான். விளம்பர போர்டும் பின் வருமாறு எழுதி வைத்தான்:

''எங்கள் கடை ரொட்டி நோயாளிகளுக்கும் ஆரோக்கியம் உள்ளவர்களுக்கும் உகந்தது. எங்கள் ரொட்டியைச் சாப்பிட யாரும் பயில்வானாக வேண்டியதில்லை.''

நண்பர்களின் மூலம் இதை அறிந்த ராமு இனியும் கிட்டுவுடன் போட்டி போடுவதில் பயனில்லை என்பதை அறிந்தான். கிட்டுவுக்குச் சமாதானத் தூதுவனை அனுப்பினான். கிட்டுவும் மகிழ்ச்சியுடன், ராமுவுக்கு வெள்ளைக் கொடி காட்டியதோடு தன் வியாபாரத்தில் பங்குதாரனாக ராமுவைச் சேர்த்துக் கொண்டான். பிறகு இருவரும் போட்டா போட்டியின்றி வியாபாரத்தை வளர்த்தனர்.

Printed & Published by B. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon